உ
ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் துணை



திருவாலவாய் என்னும்

மதுரையம்பதியின்கண்

எழுந்தருளி விளங்கும்

# ஸ்ரீ சொக்கலிங்கக் கடவுள்

## தோத்திரச் சதகம்



# ஸ்ரீ மீனாட்சியம்மையார்

## தோத்திரப் பாமாலை



காரைக்குடி — கோவிலூர் மடம்
மாணவர்
மகா. சோமசுந்தர சுவாமியவர்கள்
பாடியது.





1971
இதன் விலை ரூ. 2 – 50

24-3

உ

ஸ்ரீ சுந்தரேஸ்வரர் துணை

திருவாலவாய் என்னும்

# மதுரையம்பதியின்கண்

எழுந்தருளி விளங்கும்

# ஸ்ரீ சொக்கலிங்கக் கடவுள்

# தோத்திரச் சதகம்.

*

காரைக்குடி—கோவிலூர் மடம்

மாணவர்

**மகா. சோமசுந்தர சுவாமியவர்கள்**

பாடியது.

இந்நூல்

பல அன்பர்கள் பொருளுதவியைக்கொண்டு

மதுரை, C. V. N. அச்சகத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

*



1971

இதன் விலை ரூ. 2 – 50.

உ
ஸ்ரீ மீனுட்சி சுந்தரேஸ்வரர் துணை

# முன்னுரை

புண்ணிய பூமியாகிய இப்பரதகண்டத்தில், நமது செந்தமிழ் வழங்கும் பாண்டிய நாட்டின்கண், சிவராசதானியாய் விளங்கும், ஸ்ரீமத் ஹாலாஸ்ய க்ஷேத்திரம் என்னும் மதுரையம்பதியின்கண், ஸ்வயம்புலிங்க மூர்த்தியாய் எழுந்தருளி விளங்கும் **ஸ்ரீ மீனும்பிகா சமேத ஸ்ரீ சொக்கலிங்கக் கடவுள் மீது தோத்திரவடிவமாய் (அடியேன்)** பாடியுள்ள இந்நூல் "**ஸ்ரீ சொக்கலிங்கக் கடவுள் தோத்திரச் சதகம்**" என்னும் பெயருடையது.

சதகம் என்பது நூறுகொண்டது; எனவே இச்சதகம் நூறு செய்யுட்களையுடையது. சதகங்கள் பக்தி சதகம், நீதி சதகம், வைராக்கிய சதகம் என மூவகைப்படும். இம் மூன்று வகையும், வடமொழியில் பர்த்துருஹரி ஒருவரே செய்திருக்கிறுர்; மேலும் பலவுள்ளன. தமிழ் மொழியில் திருப்பேரூர் மகான் ஸ்ரீ சாந்த லிங்க சுவாமிகள், வைராக்கிய சதகம் பாடியுள்ளார்கள். மேலும் சிலர் பாடியிருக்கக்கூடும். ஊற்றுமலை சமஸ்தான வித்துவான் புளியங்குடி திருக்கமலப் புலவரவர்கள், சங்கரன் கோவில் அம்பிகைமீது, ஸ்ரீ கோமதியம்பிகை சதகம் எனப் பக்திமயமான சதகம் ஒன்று பாடியுள்ளார்கள்; நல்ல சுவையுள்ள பாடல்கள். மாயூரம் ஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள், மாயூரம் அம்பிகைமீது, அபயாம்பிகை சதகம் என்று பெயருள்ள பக்தி சதகம் ஒன்று பாடியிருக்கிறுர்கள்; இன்னும் சில விருக்கலாம். குமரேச சதகம், அறப்பளீசுர சதகம் முதலிய சதகங்களெல்லாம் நீதி சதகங்களாகும். இக்காலத்தே பல சதகங்கள் மறைந்தன; சில சதகங்கள் இருக்கின்றன. இருப்பன சுமார் நாற்பது சதகங்களாகும். இம் மூன்று வகையுள், இச் "சொக்கலிங்கக் கடவுள் தோத்திரச் சதகம்" பக்தி சதகத்தின் பாற்படும்.

இச் சதகத்தை, யான், சுமார் இருபது வயதுடையவனு யிருக்கும்போது பாடிவைத்தேன். அச்சமையம், செய்யுள் செய்வதற்காக யாப்பிலக்கணங்கள் உள்ளன என்பதே யெனக் குத் தெரியாது. "நிகண்டைப் பாராமல் படித்துப், பத பதார்த் தங்கள் தெரிந்துகொண்டு, அதன்மேல், பெரியோர்கள் பாடி யுள்ள செய்யுள் நூல்களைப் படித்துப் பார்த்துக்கொண்டு அந்தப் படியே செய்யுள் செய்யவேண்டும் போலும்" என்று நினைத் துக் கொண்டிருந்த காலம் அது. பின்னர், சில ஆண்டுகளுக் குள், தெரியவேண்டுவன கொஞ்சந் தெரிந்து, நீக்கவே ண்டுவன வற்றை நீக்கி, வேறே பாடிச், சில செய்யுட்களில் ஆங்காங்கே மொழிகள், வாக்கியங்கள் சிலவற்றைத் திருத்திக், கௌரவ நடையாய் விளங்கும்படி, மதுரம், சந்தம், ஓசை, பளபளப்பு முதலியவைகளை யமைத்துக்கொண்டேன். இவ்விஷயம் மேல் வருகிறது.

எனது பிறப்பிடமாகிய "சோழவந்தான்" என்னும் ஊரில், அபாரமான கல்விக் கடல்களாய் விளங்கிய, (கிண்ணிமடாலயம்) மகான் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் அவர்களும், தெய்வீகப் புலவர் பெருமான் திரு. அரசஞ்சண்முகனுர் அவர்களும் இருந் தார்களாயினும், யான், எட்டு ஒன்பது வயதுடையவனுயிருக்கும் போதே, அவர்கள் மோட்ச சாம்ராஜ்யத்தைச் சார்ந்துகொண் டார்க ளாதலால், அவர்களைச் சரணடைந்து படித்துக் கேட்டு விஷயங்கள் தெரியத்தக்க வாய்ப்பில்லாது போயிற்று. ஆயினும், அரசஞ்சண்முகனுர் அவர்களுக்கு ஏட்டுக் கல்வி கற்பித்த மகான் (ஸ்ரீ சிதம்பர விநாயகர் கோயில் என்னும் கல் மண்டபப் பள்ளிக்கூட உபாத்தியாயர்) ஸ்ரீ அழகர்சாமி தேசிகர் அவர்களிடமே எனது மாதா பிதாக்கள் அடியேனையும் பள்ளிக்கு வைக்கும்படியான பாக்கியத்தைப் பெற்றேன். காரணம், ஷை அழகர்சாமி தேசிகர் அவர்கள் நீண்டகால ஜீவிதமுடையவர்க ளாய், என்போன்ற சிறுவர்களையும் பள்ளிக்கு வைக்குங் கால மளவும் இருந்து, தமது எண்பத்தாருவது வயதில், அதாவது,

* பிரமாதீக்ஷ-ஆு ஐப்பசி-மீ 15.உ (31—10—1913) சுக்கிர வாரம் சுக்கிலபட்சத்துத் திரிதியை அனுஷ நட்சத்திரம் அன்று தேகவியோகம் ஆனுர்கள். (பிறந்தது-ஆு 1828) அவர்களது சரீரத்தை மறைக்கும் வரையும் சோழவந்தானூரில் நடந்த விசேஷங்கள் எழுதுந் தரத்ததன்று, மிகவும் பெரிய புண்ணிய புருஷர்.

பின்னர், ஆனந்த-ஆு மார்கழி-மீ 28-உ (11—1—1915) சோமவாரம் அபரபட்சத்து ஏகாதசி விசாக நட்சத்திரத்தில் தெய்வப் புலவர் திரு. அரசஞ்சண்முகனுர் அவர்கள், நாற்பத் தேழாவது வயதில் தேகவியோகம் ஆனுர்கள். (பிறந்தது-ஆு 15—9—1868)

அதன்மேல் ஆனந்த-ஆு மாசி-மீ 18-உ (1—3—1915) சோமவாரம் பௌர்ணமி திதி பூர நட்சத்திரத்தில், கிண்ணிமடா லயம் மகான் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமியவர்கள் சிவஸ்வரூபத்தில் கலந்தார்கள்.

அந்த மகான் அழகர்சாமி தேசிகர் அவர்கள் அனுக்கிரகத் தால், ஸ்ரீ இராமசாமி ஐயர் என்னும் மற்றோர் அந்தணப் பெருந் தகையாரைச் சார்ந்து, அவர்களது பள்ளிக்கூடத்தில் சிறிது ஆங்கிலம் பயிலவும், பின்பு கொஞ்சகாலங் கழித்து யோகாப்பி யாசம் ஞானப்பியாசங்களுக்கு ஆசிரியர்களைத் தேடவும், மனதில் சம்ஸ்காரம் உண்டானது. ஆக எனது இருபத்தெட்டா வது வயது முடிந்த முடிவில், பவ-ஆு ஆனி-மீ 28-உ திங்கட் கிழமையன்று காரைக்குடியைச் சார்ந்துள்ள, வேதாந்த ராசதானி யாகிய கோவிலூர் மடத்துக்கு வந்துசேர்ந்தேன்.

---

* பெரும்பாலும் மதுரை, சோழவந்தான் பகுதியிலுள்ளவர்கள் பொருட்டும், சிறுபான்மை எல்லாப் பகுதியிலு முள்ள தமிழாராய்ச்சியாளர்கள் பொருட்டும் மூவர் அந்தியகாலக் குறிப்பு இங்கே காட்டப்பட்டது.

ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகரவர்கள் அதிஷ்டான பீடாலங்கிருத ஏழாங் குருமூர்த்தமாய் எழுந்தருளியிருந்த, ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிகரவர்களிடம் சரண்புகுந்தேன். அவர்களது அனுக்கிரகமும், வேதாந்த போதனையும் வாய்க்கப் பெற்றேன்.

ஸ்ரீ கோவிலூர் மடத்திற் பயிலும் வேதாந்த நூற்களெல்லாம், செய்யுள் வடிவமாகவே யிருத்தலால், கருவிநூற் பயிற்சியும் சிறிது வேண்டுமே யென்று கருதிச், சில இலக்கண நூற்கள் இலக்கிய நூற்கள் வாங்கிக் கொஞ்சம் படித்தேன். பிறப்பிடத்தில் இருந்த காலத்தில், ஒரு சமையம் மதுரைத் தமிழ்ச்சங்கத்துக்குப் புறப்பட்டேன். அச்சமையம், அப் புறப்பாடு நிறைவேறவில்லை. பிற்காலத்தில், திருவையாற்றி லுள்ள அரசர் கல்லூரியில் படிக்க, பண்டித சித. சங்கத்து நாராயண சுவாமிகள் அவர்கள் ஏற்பாடு செய்திருந்தார்கள். பெரும்பாலும் யோக ஞானனுஷ்டானங்களாகிய நிவிருத்தி மார்க்கத்திலேயே பிரியம் இருந்துகொண் டிருந்ததால், மனதிற்குள் "எதைப் படித்துத்தான் முடிவில் என்ன செய்யப்போகிறோம்" என்று அடிக்கடி உண்டான நினைப்பால், அதுவும் நின்றுவிட்டது.

இன்றுவரையும் வித்துவான் வகுப்பிற் சேர்ந்து படித்ததில்லை. நேரங் கிடைத்தபோது தானே படிப்பதும், எப்போதோ ஒரு சமையம் ஷெ சங்கத்து நாராயண சுவாமிகள் முதலிய சில கல்விமான்களைக் கண்டபோது சந்தேகங்களைக் கேட்டுத் தெரிவதும் ஆக இப்படிப் படித்ததுதான் எனது படிப்பு. "தண்டமிழ் அலங்கல் தொடுக்கின்றோர்களைச் சோதியாதது பரஞ்சோதி" எனுந் தாயுமான சுவாமிகள் திருவாக்கைக் கடைப்பிடித்து, நாமும் நம்மாலியன்றவளவு எதாவது தோத்திரம் பாடுவோமே யென்று கருதி, எனது அறிவுக்கும் அறியாமைக்கும் ஏற்பச் சில செய்யுட்களைச் செய்து பார்ப்பேன். ஆனால், கற்றுணர்ந்த

அறிஞர்கள், எனது செய்யுட்களைப் பார்த்தால் நன்ருயிருக்கிற தென்றே சொல்லி, அவர்களது மகிழ்ச்சியை யென்னிடம் தெரிவிப்பார்கள்.

ஸ்ரீ தாயுமான சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியுள்ள, "கன்னலமுதெனவு முக்கனியெனவும் வாயூறு கண்டெனவும்" என்னும் செய்யுளிற் குறிப்பிட்டபடி, "இன்னல் பகராதுலகம்" என்று கருதியிருக்கிறேன்; அதாவது, உலகம் இந்நூலை யேற்றுக்கொள்ளும்படியான பாக்கியங் கிட்டவேண்டும் என்று திருவருளைப் பிரார்த்திக்கிறேன். என் வாணுள் முழுவதிலும், பிரயாசை யதிகமும் பயன் கொஞ்சமுமாய்விட்டது. படிக்க வேண்டுமென்று வாங்கிவைத்த நூற்களில், இப்போது பூர்த்தி யாகிய அறுபத்தைந்தாவது வயதுவரையுங்கூடப் படித்துப் பாராதன சில வுள்ளன. "புத்தகமே சாலத் தொகுத்தும் பயனறியார்" என்னும் நாலடியார் வெண்பாவின் ஓரடியை, எனக்காகவே அன்று பாடியிருக்கிருர்கள் என்று நினைக்கிறேன். திருவருள் துணை செய்யவேண்டும். இது நிற்க:—

துன்முகிஞூ (1956) யான் பாடி வெளியிட்ட, "ஸ்ரீ மீனுட்சி யம்மையார் தோத்திரப் பாமாலை" என்னும் நூலையும் இத்துடன் சேர்த்தே அச்சிட்டிருக்கிறேன். சதகத்தின் முடிவில் அந் நூலையுங் காண்க. அந் நூலை வெளியிட்ட வமையம் அதைப் பார்த்து மகிழ்ந்து எனக்கு எழுதிய வேலூர் தமிழ்ப் பண்டிதர் திருவாளர் S. K. இராமராச ரெட்டியார் அவர்களது வாசகத்தை யும், சென்னை அடையாறு, டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் ஆராய்ச்சிக் கழக வித்துவான்கள் மூவர்கள் அனுப்பித் தந்த வாசகத்தையும் சேர்த்தே, இப்போது வெளியிட் டிருக்கிறேன்.

இச் சொக்கலிங்கக் கடவுள் தோத்திரச் சதகச் செய்யுட் களும், பின்னருள்ள ஸ்ரீ மீனுட்சியம்மையார் தோத்திரப் பாமாலைச் செய்யுட்களும், பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய

விருத்தங்களாம். இவை போன்ற செய்யுட்களைச் சில அறிஞர்கள் பதினான்கு சீர் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அதாவது ஆறுவதாறுவது சீர்களை, இரண்டிரண்டு ஈரசைச் சீர்களாகக் கொள்வது அவர்களது கருத்தாம். நாலசைப் பொதுச் சீர்களாக வந்துள்ள இடங்கடோறும் அவர்கள் கருத்தின்படியே ஒத்து வருமே யாயினும், எவ்வளவோ இடங்களில் முன்னோர் செய்யுட்கள் முதலிய எல்லாச் செய்யுட்களிலும் அந்த ஆறுவது சீர்கள் மூவசைச் சீர்களாகவும் வந்துள்ளன. அதாவது, ஸ்ரீ தாயுமான சுவாமிகளது அங்கிங்கெனாதபடி என்னும் செய்யுளில் "மன வாக்கினில்" "எந்தெய்வமென்" என்றும், திருவருட்பாவில் வளர்வயித்"தியநாதனே" என்றும் வருகின்ற இவை போன்ற சில விடங்களில், ஈரசைச்சீர் ஒன்றும், ஓரசைச்சீர் ஒன்றுமாகப் பிரிக்கவேண்டி வருகிறது. ஓரசைச்சீர் ஈற்றில் வருவது வெண்பாவிற்றானேயன்றி, ஏனைய விருத்தப் பாக்களில் வருவதாகத் தெரியவில்லை. ஆகையால் ஆறுவதாறுவது சீர்கள் நாலசைச் சீர்களாகவோ மூவசைச் சீர்களாகவோ எப்படி வந்தாலும் ஒரு சீராகவே கொண்டு கணக்கிட்டுப், பன்னிருசீர் என்று குறிப்பிடுவதே பொருத்தம் எனத் தெரிகிறது. மேல், தமிழறிந்த தக்கோர்கள் சிறியனேற் கறிவுறுத்தும் வண்ணம் கேட்டுக்கொள்கிறேன்.

செய்யுளைச் செய்யுளோசைப்படியே படிக்கும் அன்பர்கட்கே தான் இக் குறிப்பு எழுதுவதன்றி, எழுதுதற்குச் சொல்லல் (Dictation) போல் படித்துக்கொண் டிருப்பவர்கட் கன்று. அவர்கட்கு எந்தச் செய்யுள் எப்படியிருந்தாலுஞ் சரியே. சுமார் ஒரு முப்பது வருட காலமாகவே, நந் தமிழ் மக்கள், செய்யுளைப் படிக்க ஆரம்பிக்கும்போதே பதங்களைப் பிரித்துப் பிரித்துச் சாதாரணமான வாய்ப்பேச்சைப் போலவே படிக்கும் ஒரு விகாரமான முறையைக் கையாண்டு வருகிறார்கள். பாட்டைப் பாட்டாகப் படித்துவிட்டுப், பிறகு பதம் பிரித்துச் சொல்லிப், பொருள் பார்ப்பதில்லை. அதனாற் செய்யுளின் ஓசையினிமை கிடைப்பதில்லை. சாதாரணமாயுள்ள என்போன்றவர்கள்

சொன்னால் எவ்வளவோ மறுப்பும் பேசுகிறார்கள் எவ்வளவு பெரிய நூலாயிருந்தாலும் அந்நூல் முழுமையும் மனதில் தாரணை பண்ணிக்கொள்வதற்காகவேண்டியே எந்த நூலையும் பெரியோர்கள் செய்யுள் வடிவமாகவே செய்து வைத்தார்கள். வசனமாயிருந்தால் ஆயிரக்கணக்கான விஷயங்களைத் தாரணை பண்ண முடியாதல்லவா ? இக் கருத்தை யுணராமல் பாட்டுகளை யெல்லாம் உரைநடையைப் படிப்பது போன்றே படிக்கிறார்கள். ஆனால் விபரீதமாய் ஆத்திசூடி முதலிய சூத்திரங்களையும், சிவஞானபோத முதலிய சூத்திரப் பாக்களையும், திருக்குறளையும் இராக தாளங்களுடன் (பெண்கள் நடனத்திற்குப் பக்கப் பாட்டுப் பாடுவதுபோல்) பாடுகிறார்கள். இப் பழக்கம் யாருடைய போதனையோ தெரியவில்லை. இதுவும் கலியுகத்தில் நிகழும் தர்மங்களில் ஒன்றுபோலும்; ஆச்சரியந்தான் !

இந்நூலில் இலக்கண வரம்பாகிய சொற் சுவைகளும், பக்திச் சுவை, இலக்கியச் சுவையாகிய பொருட் சுவைகளும் நிரம்பவுள்ளன. திருவருட் பெறுதியின் பொருட்டு வேண்டிக் கோடலாகிய பக்திச்சுவைப் பகுதிகளைப் பொருள் விளங்க ஊன்றிப் படிப்பார்களேயானால், நிச்சயமாய் ஆனந்தக்கண்ணீர் வரவே செய்யும். இலக்கியச்சுவையை விரும்பும் அன்பர்கட்கு, அச் சுவையின் இன்பங்களும் கிடைக்கும்.

சதகம் ஒவ்வொரு பாடலின் முடிவிலுள்ள மகுடந்தோறும் "சங்கம்வள்ர்" என்றிருக்குஞ் சொற்களில், மகர வொற்றை, (அடுத்து வகரம் வந்து ஒலி தடைபடாததினாலே) அலகு பெறுதெனக்கொண்டு, காய்ச்சீராகவே கொள்க; கனிச்சீரெனக் கொள்ளற்க. இங்ஙனஞ் சில செய்யுட்களிலுள்ளன. நீரம்விழி சிந்திலேனே (30) வருடம்வரு டந்தோறும் (44) செவியும்விழியுங்கொள (45) விடியும்வரை (74) என்னும் இவை போன்ற சிலவிடங்களிலும், நெக்கனி வாளர்பலர் (52) என ரகர முதலாய இடையினம் இடையிட்ட சொற்களிலும் அலகுபெறுதென்பதறிக. இவ்விருவகைக்கும் உதாரணமாகச், சேக்கிழார்

பிள்ளைத்தமிழ் சிறுபறை—மேயம்வளை (2) சிறுதேர்—அறியும் வகை (2) என்பனவும்; முத்தப் — பொம்மல்குழை (8) அம்புலி — அறிவர்கழ (7) சிறுபறை — இகழ்வில்சிவ (3) சிறு தேர்—ஆம்பல்பல (8) ஷை — நால்வர்திரு (10) என்பனவும் கண்டறிக.

மதிகொண்ட (2) கல்லுக்குளுற்றிடும் (18) நறைதங்த (21) கோடவிழும் (35) கெட்டமதி (42) இந்தமானிலமீது (43) கட்டுண்டபூங்குழல் (47) இவ்வேழு செய்யுட்களும் சொற்பின் வருநிலையணி யுடையன. மேலும் ஆங்காங்கே மயக்கவணி, வியப்பணி, நிருபகவணி முதலிய சில பொருளணிகள் இடம் பெற்றுள்ளன. கதியிலே விழைவின்றி (89) யென்னுஞ்செய்யுள் இயைபுத்தொடை ; மேலும் பல சொல்லணிகள் உள்ளன.

பொழியாத முகில் (53) பறவாத வண்டு (63) கந்தனிற் பிறவாத மலர் (72) இவைகள் குறிப்புப் பொருள் உணர்த்தும் பிரயோகங்களாம். சங்க விலக்கியங்களில் வந்துள்ள "ஓடாக் குதிரை" "பூவாவஞ்சி" போன்றவை. சித்திரைப் பூரண (13) உரமருவு பானுமதி (84) இவ் விரண்டு செய்யுட்களும் பிராணுயாம யோகாப்பியாசக் கருத்தைச் சிறிது புலப்படுத்து வனவாம்.

மண்ணுலக முதலாக (48) பூபாரம் நீக்க (93) என்னுமிவ் விரண்டு பாடல்களும் நஹிநிந்தா நியாயம் எனக்கொள்க.

அதாவது, வேதாந்த வித்தையின் பயன் சித்தித்தற்கான மனப்பரிபக்குவ மின்மையாகிய தைனிய பாவத்தைக் காட்டி, ஸ்ரீ ஈஸ்வரானுக்கிரகத்தை விரும்பி, அப் பரமேஸ்வர சரணப் பிரபத்தி வேண்டும் என்று சொன்னதன்றி, அத்துவைதபட்ச நிராதரமோ பிரதூஷணமோ அன்று எனவறிக.

இங்ஙனம் கொள்ளாவிட்டால், உபநிஷத் பிரதிபாத்திய பிரஹ்ம ஞானுநுபவம் வேண்டுமென்று முறையிட்டுள்ள 14, 27,

28, 38, 40, 44, 52, 54, 55, 56, 57, 58, 59, 61. 62, 74, 79, 80, 83, 87, 88, 90, 94, 95, 98, ஆகிய இவ் விருபத்தைந்து செய்யுட்களுக்கும் முரணுகுமென் றறிக.

ஸ்ரீ நீலகண்ட தீட்சிதர் திருவாய்மலர்ந் தருளியுள்ள, "ஸ்ரீ ஆனந்தசாகர ஸ்தவம்" என்னும் நூலில் கர்மம், பக்தி, ஞானம் மூன்றையும், தாம் விரும்பாதவர் போல, நஹிநிந்தா நியாயத்தாற் கூறி, ஸ்ரீ மீனுட்சிதேவியின் சரணப்பிரபத்தியை வேண்டிக்கொள்வதறிக.

பெரும்பாலும், மகர வொற்று தொக்கி வருமிடங்களில் அர்த்தஞானத்தின் பொருட்டு, அம் மகர வொற்றுக்களையும், சிறுபான்மை வேறு எழுத்துக்களையும், நகவளைவில் அமைத்திருக்கிறேன். பாட்டைப் படிக்கும்போது, அவைகளைச் சேர்த்துப் படிக்கவேண்டியதில்லை.

பலவிடங்களில், சம்ஸ்கிருதச் சொற்கள் பிரயோகிக்கப் பட்டுள்ளன. யான் படித்த நிகண்டு வடமொழிக் கலப்புள்ள சூடாமணி நிகண்டு ஆனதினுலும், கற்ற அத்துவைத நூற்களின் கருத்துக்களை யமைக்கும்போது வடமொழிகள் வைத்தே ஆகவேண்டி யிருப்பதினுலும் என்றறிக. ஆயினும், விரசமா யிராமல், பாலினெடு தேன் வந்து சேர்ந்ததுபோலும் இன்சுவை யாகவே யிருக்கும். வடமொழி வெறுப்பின்றியவர்கள் பார்ப்பின் இக் கருத்தை யுள்ளபடி நன்கறிவர்.

தொல்காப்பியம் சொல்லதிகாரத்திலுள்ள "வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே" என்னும் சூத்திரத்தையும், அச் சூத்திரத்திற்குச் சேனுவரையர் செய்துள்ள உரையையும் நோக்குக. அத்துடன், ஸ்ரீ சுவாமிநாத தேசிகர் செய்த "இலக்கணக்கொத்துரை" யென்னும் நூலின் கண், ஏழாம் சூத்திரம் முழுமையும் பார்க்கக்கடவர்.

சம்ஸ்கிருதம், எல்லா நாட்டுக்கும் பொதுமொழி யென்பதை யுணராமல், ஒருசாரார்க்கு மட்டும் உரியதென விபரீதமாய் நினைந்துகொண்டு, இக்காலத்துள்ள மக்கள், அதை மிகவும் வெறுக்கிறார்கள். நைடதம்—தமயந்தி சுயம்வரப் படலத்தின் மூலம், சம்ஸ்கிருதம் பொதுமொழியென்ப துணரப்படும். அன்றியும், ஆதிகுரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமி அவர்கள், தாம் செய்த உபநிஷத்பாஷிய முதல் எல்லா நூல்களையும் சம்ஸ்கிருதத்தில் செய்ததன் காரணம், "பொதுப் பாஷையில் செய்தால்தான் எல்லா நாட்டு மக்களுக்கும் ஆகும்" என்ற கருணை நோக்கமேயாம். பொதுமொழி யல்லாத எதோ ஒரு நாட்டுக்குரிய மொழியில் மட்டும் செய்திருந்தால், அந்நாட்டு மக்களுக்குமட்டுந்தானே யாகும்; மற்றவர்களுக்கு எப்படி உதவும்? இதுகொண்டு சம்ஸ்கிருதம் பொதுமொழி யென்பதறிக.

நம் தாய்மொழியாகிய தமிழில் அபிமானம் வைப்பதற்காக, சம்ஸ்கிருதத்தை வெறுத்தேதா னுகவேண்டுமா? தாயிடமுள்ள அன்பைக் காட்டுவதற்காகத் தகப்பனிடம் கலகம் பண்ணுவதா? தமையனிடமுள்ள பிரியத்தைக் காட்டுவதற்குத் தம்பியிடம் பூசல் விளைக்கலாமா? அதுபோன்று, வடமொழியை வெறுக்காமலே தமிழில் அபிமானம் வைக்கலாமல்லவா? நம் தமிழ் மொழிக்கு ஆசிரியராகிய ஸ்ரீ சிவபெருமான்தானே வடமொழிக்கும் ஆசிரியர். ஸ்ரீ ஈஸ்வர வாக்கியத்தை மிகவும் உல்லங்கனம் பண்ணுவது நமது வாக்குக்கு மகா தோஷமல்லவா?

சம்ஸ்கிருதச் சொற்கள் கலவாத மொழி, யொன்றுவது இருக்குமா என்பது சந்தேகந்தான். ஆறாயிரங் கல் தூரத்திலிருந்து வந்து வழங்கும் ஆங்கில மொழியிலுங்கூடச் சம்ஸ்கிருதச் சொற்கள் நிரம்பக் காணப்படுகின்றன.

**உதாரணம்:—**

| * சம்ஸ்கிருதம் | இங்கிலிஷ் | சம்ஸ்கிருதம் | இங்கிலிஷ் |
|---|---|---|---|
| மாத்ரு | **Mother** | த்வனி: | **Tone** |
| பித்ரு | **Father** | ரூபா, ரூப்யம் | **Rupee** |
| ப்ராத்ரு | **Brother** | மன: | **Mind** |
| ம்ருதம் | **Murder** | விதவா | **Widow** |
| நாமம் | **Name** | மத்யம் | **Medium** |
| ஸமம் | **Same** | ஆப்தர் | **Author** |
| த்ரி | **Three** | புரா | **Pro-verb** |
| கௌ: | **Cow** | ப்ரார்த்தனு | **Prayer** |
| ஷஷ்டி: | **Sixty** | கிரு, கீ, கிராம் | **Gram-mar** |

என்னும் இவை போன்ற பல சொற்களையும் ஆராய்ந்துணர்வதோடு, சம்ஸ்கிருதம் வெறுக்கத்தக்க மொழியல்லவென்பதையும் உணரக்கடவர். ஆங்கிலத்தையும், சம்ஸ்கிருதத்தையும் சரிவர வுணராத என்போன்றவர்கட்கே இவ்வளவு சொற்கள் கிடைக்குமாஞல், இரண்டு மொழிகளிலும் நிரம்பப் பாண்டித்தியமுடைய அறிஞர் பெருமக்களுக்கு எவ்வளவு சொற்கள் கிடைக்கலாம் என்று கருதவேண்டுகிறேன்.

---

* சம்ஸ்கிருதச் சொற்களை நாகர லிபியில் எழுதியிருந்தேன். நாகர லிபி இவ் வச்சகத்தில் இல்லாததால் தமிழில் எழுதியச்சிடப்பெற்றது. சம்ஸ்கிருதம் அறிந்த அன்பர்கள் அப் பாஷையின்படியே உச்சரித்துக்கொள்ள வேண்டுகிறேன்.

இன்னும் ஒரு விஷயம் எழுதியாகவேண்டி யிருக்கிறது. "பெரியோர்கள் எல்லாம், அர்த்தமாகாத சொற்களை வைத்து மிகவுங் கடினமாகப் பாடிவைத்துவிட்டார்கள்" என்று பலர் சொல்லுகிறுர்கள். இது, மிகத் தவருன எண்ணத்தால் உண்டான வார்த்தைகளேயாம். மக்களுக்கு விளங்கும்படி தான் பெரியோர்கள் பாடிவைத்திருக்கிறுர்கள். கற்கவேண்டுவனவற்றைக் கற்றுத் தெரிந்துகொள்ளாமல், பாடிவைத்த முதறிஞர்களைக் குறைகூறிக்கொண்டே யிருப்பது, மிகவும் வருந்தத்தக்க விஷயமேயாம். நியாயமாக, ஒருவனைத் "தமிழ்ப் படிப்பாளி" என்று சொல்லவேண்டுமானுல், அவனது குமாரப் பருவந் தொடங்கிச் சுமார் பன்னிரண்டு வருடங்கள் படித்த படிப்பும் மேல் எட்டு வருடங்கள் வித்துவான்களோடு பழகிய பழக்கமும் அவனுக்கிருக்குமானுல், அவனைத் தமிழ்ப் படிப்பாளி யென்று சொல்லலாம்.

இலக்கியங்களில் ஒரு பதினுயிரஞ் செய்யுட்களை புத்தகத்தைப் பார்க்காமலே ஒப்பிப்பவர்களுக்குத்தான் தொல்காப்பியம் பாடஞ் சொல்வது என்ற ஒரு முறை, நமது தமிழ் நாட்டில் இருந்து வந்தது. அதாவது, நிரம்ப இலக்கியப் பயிற்சி யிருந்து இலக்கணம் பயிலவேண்டும் என்பது கருத்தாம். திருநெல்வேலி—சிந்துபூந்துறை ஸ்ரீ வெள்ளியம்பலவாண சுவாமிகள், தமதிடம் தொல்காப்பியம் பாடங்கேட்க வந்த ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகளிடம் "கு" என்னும் எழுத்தில் எடுத்து "கு" என்னும் எழுத்திலேயே முடியும்படி வெண்பா வொன்று பாடுக என்று ஆக்ஞாபித்ததும், இக் கருத்தையே புலப்படுத்துவதாம். இக்காலம், செய்யுளைப் பார்த்துப் படிக்கவே தெரியாதவர்களுக்குங் கூடத் தொல்காப்பியம் பாடஞ் சொல்லுகிறுர்கள். இக்கால மக்களிற் பெரும்பாலோர், வசனம் மட்டுந்தான் படிக்கிறுர்கள். அதுவும் தினவிதழ், வாரவிதழ், மாதவிதழ் வசனங்களையன்றி, இலக்கியச் செறிவான வசனங்களைப் படிக்கக் கஷ்டப்படுகிறுர்கள். பார்க்கும் நமக்கு மிகப் பரிதாபமா யிருக்கிறது.

அடியேன் படிக்கும்போது, அக்காலம், பள்ளிக்கூடச் சிறுவர்களாகிய நாங்கள் ஒருவருக்கொருவர், எழுத்துக்களை அடையாளந் தெரிந்துகொள்வதற்காக, அதாவது லகர, ளகர, ழகரங்களுக்கு, இலானுவா, உளானுவா, அழானுவா என்று கேட்டும்; நகர, னகர, ணகரங்களுக்கு, தந்நகரமா, றன்னகரமா, டண்ணகரமா என்று கேட்டும் தெரிந்துகொள்வோம். இக்காலம் இந்தப் பரிபாஷையே கொஞ்சமுமின்றி மாறிவிட்டதால், லகர, ளகர, ழகரங்களை வித்தியாசமின்றியே உச்சரிக்கிறார்கள். சின்ன லானுவா, பெரிய லானுவா, என்று கேட்கிறார்கள். சின்ன நானுவா, பெரிய நானுவா என்றும் கேட்கிறார்கள். இவைகளிற் சிறியவை யெவை? பெரியவை யெவை? அன்றியும், வல்லின ரகரமா, மெல்லின ரகரமா என்றும் கேட்கிறார்கள். தமிழில் வல்லின றகரமும், இடையின ரகரமுந்தானே உண்டு. மெல்லின ரகரமென வொன்றுண்டா? இக் கேள்வியினாலேயே இவர்கள் படிப்பு அறிஞர்களுக்கு விளங்குகிறதல்லவா?

இக்காலத்தவரிர் சிலர், "ஆங்கிலத்தில் ரகரத்துக்கு **R**-உம், லகரத்துக்கு **L**-உம், நகரத்துக்கு **N**-உம், வகைக்கு ஒவ்வொன்றுதானே யிருக்கின்றன. தமிழில்தானே வகைக்கு இரண்டு மூன்று எழுத்துக்களை ஏற்படுத்தி வைத்துக்கொண்டு மனுஷனைப்போட்டுப் பிராணனை வாங்குகிறார்கள்" என்று சொல்லுகிறார்கள். ஸ்ரீ பரமேஸ்வரனாவது அகஸ்தியருக்குத் தமிழைப் போதிக்கும்போது, இவர்களைக் கேட்டுப் போதித்திருக்கலாம். அல்லது அகஸ்தியராவது தொல்காப்பியனார் முதலிய பன்னிருவர்க்கும் போதிக்கும்போது இவர்களைக் கலந்தாலோசித்துப் போதித்திருக்கலாம். போகட்டும், தொல்காப்பியராவது இவர்களைச் சமாதானிக்கச் சூத்திரம் செய்தாரு மில்லை. கீரைத் தண்டைப் பிடுங்க ஏலப்பாட்டுப் பாடுபவர்களுக்

காகப், பெரிய ஆலவிருட்ச முதலிய மரங்களை வைத்து உண்டாக்காம லிருப்பார்களா? இஃதென்ன வார்த்தை, இஃதென்ன சிந்தனை. நன்றாகப் படிக்க வேண்டிக்கொள்கிறேன்.

நிகண்டுகளில் ஒன்றையேனும் படிப்பதில்லை. நிகண்டு என்றால் என்ன என்று, பலர் என்னிடம் கேட்டிருக்கிறார்கள். இவர்களுக்குப் பத பதார்த்தங்கள் எப்படி விளங்கும்? வேறு சிலர், நிகண்டு படிக்க நேரமேது என்று சொல்லுகிறார்கள். வகுப்புக்குக் கொஞ்சம் கொஞ்சமாகவாவது (பாடமும் வைக்கப் பெற்றுப்) படித்தால், படித்து முடிந்துவிடும். பின்னர் எதுவும் பொருள் விளங்கும்.

இவர்களுக்காகவேண்டிச் சிறந்த செய்யுட்களை யெல்லாம் சந்திகளைப் பிரித்துப் பிரித்தே சிலர் அச்சிடுகிறார்கள். சந்திகளைப் பிரித்து அச்சிட்டால், நான்குவிதப் பாக்களிலும் வெண்டளை முதலியவைகள் பொருந்துவதெங்ஙனம்? துறை, தாழிசை, விருத்த முதலிய பாவினங்களில் சீர்கள் அளவொத்து வருவதெங்ஙனம்? தேவாரப் பண்களைப் பாடும்போது தாளம் ஒத்து வருவதெங்ஙனம்? இப்படியெல்லாம் அச்சிட்டுக் கொள்வதானால் தொல்காப்பியம் முதலிய இலக்கணங்கள் ஏன்? மகான் துறை மங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் திருவாய்மலர்ந் தருளிய வெங்கையுலாவில் அமைந்துள்ள:—

..............................தலம் படைத்தோன்
கண்ட குலத்திற் கருதி னிரட்டியாம்
பண்ட குலத்தின் பயனானோன்—மண்டலிகர்
நல்லகோ லின்று நவைக்கோ லெனச்செயுங்கோல்
வல்லகோ லண்ண மலைவள்ளல்—மல்லலுறச்
சந்தி பொருத்தித் தகுஞ்சீர் கெடாதடுக்கிப்
புந்தி மகிழப் புதவணித்தா — முந்தையோர்
செய்யுள்போற் செய்த திருக்கோயி லுள்ளிருந்தெம்
மையுள்போக் கிற்கும் பரஞ்சோதி—(63-67) என்னும்

அடிகளைப் பார்க்கும்படிக்குத் தமிழ் மக்களிடம் கேட்டுக்கொள் கிறேன். சந்தியைப் பிரித்தால், ஒரே சந்தியிற்றுனே இரண்டு மூன்றுபொருள்படும்படி பாடியிருப்பதை, யெந்தப் பொருளுக்கா கப்பிரிப்பது? திருவிளையாடலில் நரியைப் பரியாக்கிய படலத்தில் 86-ஆம் பாட்டிலுள்ள "காயும்வேன் மன்ன வோரிக் கடும்பரி யமையம் வந்தால், ஞாயிலுந் தாண்டிச் செல்லும்" என்றிருப் பதில், ஓரிக் கடும்பரி யென்றும், ஓர் இக்கடும்பரி யென்றும் உள்ள இரண்டு பொருளில், எந்தப் பொருளுக்காகப் பிரிக்க லாம்? ஷை படலம் 120-ஆம் பாட்டிலுள்ள, "ஈறில்புக ழாயொருந ரிப்பரியைப் பூசனஞ்செய் திறைஞ்சிப் பாசம் மாறுவரால்" என்றிருப்பதில், ஒரு நரிப்பரியை யென்றும், ஒருநர் இப்பரியை யென்றுமுள்ள இரண்டு பொருளில் எந்தப் பொருளுக்காகப் பிரிக்கலாம்? மாம்பழக் கவிச்சிங்க நாவலர் பாடியுள்ள "சந்திர விலாசம்" என்னும் நூலில், எவ்வளவோ இடங்களில், இரண்டு மூன்று பொருள்கள் படும்படி யான சந்திகளிருக்கின்றன. பிரித்தால் எப்படிப் பொருள்படும்? ஆகையால், செய்யுளைச் செய்யுளாகப் படிக்கக் கற்றுக்கொடுத் துப், பின்னர்ப் பிரித்துச் சொல்லிக்கொடுக்கவேண்டுமே யன்றிச் செய்யுட்களைப் பிரித்துப் பிரித்து அச்சிடுவதென்பது மிகமிக வருந்தத்தக்க வொன்றேயாம். "அவற்கொன்றுன்" என்பதன் பொருள் வேறு; பிரித்து "அவன்கொன்றுன்" என்று போட் டால், பொருள் வேறு. வாயிற்பாலன் என்பதன் பொருள் வேறு; வாயில்பாலன் என்பதன் பொருள் வேறு.

ஆகையால், இந்நூலில் நிரம்பப் பிரிக்காமல் எங்கேனும் சிலவிடங்களிற் பிரித்திருக்கிறேன். அதாவது, உயிர்மெய்யில் மெய்யையும் உயிரையும் பிரித்தும், ளகர தகரங்கள் சேர்ந்துள்ள டகரங்களை, "நின்னதருடுணை" என்றிருப்பதை "நின்னதருள் துணை" என்றும், "வேதங்க டுதிபண்ணுகின்ற பொருளே"

என்றிருப்பதை, "வேதங்கள் துதிபண்ணுகின்ற பொருளே" என்றும், இவ்விதம் பிரித்துமிருக்கிறேன். இதுவும் எனக்குச் சம்மதமின்று ; பிறர் பொருட்டேயாம்.

ஆங்கிலத்திலேயே காலத்தைக் கழித்துவிட்டுத், தமிழ்ப் பாடல்கள் அர்த்தமாகவில்லை யென்று சொல்லிக்கொண்டிருப் பதினுல் என்ன பயன். ஒருவன் ஆங்கிலக் கல்வியை **M. A.** வரைக்கும் படிப்பதற்கு, எவ்வளவு பிரயத்தனம் எடுத்துக் கொள்ளுகிருனே, அதில் எட்டிலொருபாகங்கூடத் தமிழுக்குப் பிரயத்தன மெடுத்துக்கொள்ளாவிட்டால் எப்படித் தமிழ்மகனு யிருக்கமுடியும் ? இன்னமும் நிரம்ப எழுதவேண்டுவனவுள்ளன. முன்னுரையே அதிகம் விரிவாகிறதென்று நிறுத்திவிட்டேன். ஆகையால் வாசகர்கள், விருப்புவெறுப் பின்றிப் பொதுநோக் காக இந்நூலைப் படித்துப்பார்க்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

இந்நூலை அச்சிட்டு வெளியாக்கப் பொருளுதவிபுரிந்தவர்க ளாகிய, இருவகை யாஸ்ரமத்தினருள், துறவாஸ்ரமத்துள்ள சாதுக்களுக்கு, எனது மிகுந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்வதோடு, இல்லறத்துள்ள அறிஞர் பெருமக்களுக்கெல் லாம், அரோக திடகாத்திரம், அஷ்டைஸ்வரியம், சிந்தித மனோரத சித்தி, சிவஞானச் செல்வம் இவைகள் மேன்மேலும் பெருக வேண்டுமென்று, ஸ்ரீ மீனுட்சி சுந்தரேஸ்வரரைப் பிரார்த்திக் கிறேன் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்புத்தகத்தை நன்ருய் அழகுற அச்சிட்டுக் கொடுத்த மதுரை C. V. N. அச்சகத்தார்கட்கு எனது நன்றி உரித்தாகுக.

இங்ஙனம்,

**மகா. சோமசுந்தரம்,**
நூலாசிரியன்.

கோவிலூர் மடம்
காரைக்குடி,
1—10—1971.

உ
ஓம் தத் ஸத்

சேலம் மாவட்டம் — ஆத்தூர்

# தத்துவ சன்மார்க்க சங்கம்

ஆசிரியர்

## உயர் தவத்திரு நீ. சண்முகானந்த சுவாமியவர்கள்

திருவாய் மலர்ந்தருளிய

# சாத்துக் கவிகள்

---

அறுசீரடியாசிரிய விருத்தம்.

1. பொன்னூர்செஞ் சடையானும் பொற்புறுநல் லிடமதனிற்
பொலியு(ம்) ஞான
மின்னூர்மெல் லிடையாளு(ம்) மேவியுறை தலங்கடமின்
மேலோர் போற்றுந்
தென்னூர்முத் தமிழ்வளருந் திருந்துபுகழ்ச் சமிவனத்தின்
சீர்மை யெல்லாஞ்
சொன்னூர்முக் குற்றமுதற் றென்மையுறு மவித்தைதனைத்
துறந்த மேலோர்

2. மூர்த்திதலந் தீர்த்தமெனு(ம்) மூன்றுலும் புகழ்பெறுமம்
முதுப திக்கட்
சீர்த்தியுறுந் திருமுத்து ராமலிங்க முனிவரனூர்
திகழுஞ் சேனூர்
கீர்த்தியுறும் பெருமடத்தின் குருமரபின் அருணெறியிற்
கிளர்வோன் செங்கோற்
பார்த்திபரு(ம்) மதிக்குமொரு பண்பொடுநற் கல்விநலம்
படைத்தோ னம்மா !

3. கற்றவர்தம் உறவுடையான் கழுத்திலக்க வடமுடையான்
கருதா ரூரைச்
செற்றசிவன் றிருவடியிற் சேர்த்தநல வுளமுடையான்
செகத்தின் ரேற்றம்
புற்றரவம்பழுதையிற்போன்மித்தையெனுந்திடமுடையான்
பொருள்சேர் ஞானம்
பெற்றவர்கள் பிரமமெனப் பேசுமுப நிடதவுரை
பெரிது ணர்ந்தோன்

4. சொற்பொருளின்நற்சுவையுந்துலங்குதிருவருட்சுவையுந்
தூயோர் வேண்டு(ம்)
நற்பொருளாம் வேதாந்த நயச்சுவையு நலங்கிளரு(ம்)
ஞான யோகச்
சொற்பொருளுந் தொடையழகுந் துலங்கவரும் அணிபலவுந்
தொடர்பா யோங்கச்
சிற்பொருளாஞ் சொக்கலிங்கக் கடவுள்தோத் திரச்சதகம்
செப்பி மேலும்

5. அந்தமுறும் அங்கயற்கண் அம்மைதிருத் தோத்திரமாம்
அணியார் மாலை
சிந்தைமகிழ் செந்தமிழாற் செப்பினனுஞ் சீர்த்திமகா
தெருள்சேர் சோம
சுந்தரனுங் கவிதைவலோன் சொற்பெறுமிந் நூல்கணிதஞ்
சொல்வோர் முந்தைப்
பந்தமறுத் தரனடியைப் பற்றியழி யாதசுகம்
படைப்பர் மன்னே.



உ
ஸ்ரீ சுந்தரேஸ்வரர் துணை

# ஸ்ரீ குருபரம்பரை வணக்கம்.

கட்டளைக்கலித்துறை

## ஸ்ரீ நடராஜர் துதி.

1. வேதங்க ளுந்தில்லை மூவா யிரவரும் விண்ணவரும்
போதங்க ளார்ந்த புயங்கேச னோடு புலிமுனியும்
பாதங்க ளேத்த வுமைபார்க்கச் சிற்றம் பலந்தனிலென்
னுதங்க நீங்கவொன் றனந்த மாகநின் றாடியதே

## ஸ்ரீ பஞ்சமூர்த்தி துதி.

2. ஒற்றையந் தந்தச் சமிவன வைங்கர னெண்கடம்பப்
பொற்றரு மாலை புனைந்தவ னுன்மறை போற்றுகின்ற
கொற்றவா ளீசன் றிருநெல்லை யம்மை தருமணியெங்
நற்றவ னுமுத்தி ராமேச னைவரு(ம்) நந்துணையே

## ஆதிகுரு சங்கரர்.

3. மங்கள மார்கயி லாச மலைதனில் வாழ்பரமன்
இங்கொரு மானிட னாகிவந் தானென்னு மெங்கள்பிரான்
அங்கள பம்புனை சாரதா பீடத்தின் ஆதிகுரு
சங்கரர் பூஞ்சர ணங்களை யென்சிரஞ் சார்த்துவனே

## வித்தியாரண்யர்

4. மாதியல் பாதிநன் மேனியன் முன்றிரு வாய்மலர்ந்திங்
கோதிய நான்மறை பாடியஞ் செய்தம கோன்னதனும்
போதிய பஞ்ச தசிமுத னூலும் புகன்றமகான்
வேதியர் மாமணி வித்தியா ரண்யரை வேண்டுவனே

### சுப்ரமண்ய தேசிகர்.

5. இப்ரபஞ் சந்தனி லின்னம் பிறந்திறந் தேயுழலா
தப்ரமே யப்பொரு ளான பரத்தி னனுபவத்தை
விப்ரவித் யாரண்ய மேலோன் மரபின் விளங்கிநின்ற்ோன்
சுப்ரமண் யாசான் பதாம்புய மென்சிரஞ் சூடுவனே

### நயினியப்ப தேசிகர்.

6. கங்கை நதியி னதிகங் குளிரக் கலைநிரம்புந்
திங்க ளமுதினு மாழிச் சுதையினுந் தித்திக்கவே
தங்க ணடைந்த வடியவர்க் கானந்தந் தந்தருளும்
எங்க ணயினியப் பாசிரி யன்பத மேத்துவனே

### அழகப்ப தேசிகர்.

7. ஒருமா னிடவடி வான பரம னுலகுயிர்கள்
கருமான வாய்புகு தாவகை காப்பவன் காட்சிமுதல்
வருமான மாறு முணராத வின்ப மகோததியாம்
பெருமா னழகப்ப தேசிக னின்புகழ் பேசுவனே

### வீரபத்திர தேசிகர்

8. வரம்பொரு சற்று மிலாத வியாபக வான்பொருளைக்
கரம்பொரு தத்துதிக் குந்தொண்டர் சாரவுங் கந்தர்ப்பனின்
சரம்பொரு தாம லவரைப் புரக்கவுந் தண்ணருள்செய்
பரம்பொரு ளாம்வீர பத்திர மூர்த்தியைப் பாடுவனே

### முத்தைய தேசிகர்.

9. எத்தை யறிந்திடி னெல்லா மறிந்தபண் பெய்திடுமோ
அத்தை யறிந்திடி ஞனந்தம் வாய்க்குமென் றுரணஞ்சொல்
வித்தை யறிந்திங் கனுபூதி யுற்ற விகிதகுரு
முத்தைய ஞான மகாதேசி கன்பாத(ம்) முன்னுவனே

### உகந்தலிங்க தேசிகர்.

10. சகந்தனை மித்தையென் றுஞ்சச்சி தானந்தந் தாமென்றுமே
அகந்தை தவிர்ந்து தியானம் புரிபவர்க் கத்துவித
சுகந்தர வந்தவன் சிக்கற் பதிசேர் சுவர்ணபுரி
யுகந்தலிங் கேச மகாஞானி பூஞ்சர ணுள்குவனே

### முத்திராமலிங்க தேசிகர்.

11. பமராதி பண்ணிசைக் குஞ்சமி மாவனம் பாங்குபெற
இமராச கன்னிகை சீர்நெல்லை நாயகி யின்னருளால்
அமரா பதியெனச் செய்த பிரானெங்க ளாதியிறை
மமராதி யற்ற குருமுத்தி ராமேச மாமணியே

12. தருமுத்தி யாகிய சாலோக மாதியிற் சாற்றிடுமீ
ரிருமுத்தி யன்றித் தனையண்டி னர்க்கென்று மேயழியா
வொருமுத்தி தந்தரு ளத்திரு மேனிகொண் டோர்குருவாய்
வருமுத்தி ராமலிங் கேசர் பதாம்புயம் வந்திப்பனே

### அருணாசல தேசிகர்.

13. அறவுரு வானவெள் ளேற்று விடங்கர்பொன் னம்பலத்தே
திறமுட னடுந் திருவடி யுள்கிய சிந்தையுளான்
நறவுமிழ் பூஞ்சமி யூரிரண் டாவது ஞானகுரு
துறவரு ணாசல தேசிகன் ருண்முடி சூடுவனே

### பழனியப்ப தேசிகர்.

14 துழனியைக் கொண்ட சமிவன வண்பதிச் சொற்கதிர்சூழ்
கழனியைக் காத்த திருநெல்லை நாயகி கண்ணருளால்
அழகினைப் பெற்றுயர் கோவிலூர்ப் பீட மலங்கரித்தோன்
பழனியப் பாசிரி யன்பாத நாளும் பணிகுவனே

## சிதம்பர தேசிகர்.

15. நிதம்பர வுந்தொழும் பர்க்கழி யாவுயர் நிர்மலமாம்
பதம்பர வற்கருள் பாலிக்கு மெங்கள் பரமபதி
யிதம்பர வும்புனே பேர்கரு ணாநிதி யென்னுமொரு
சிதம்பர ஞான குருபரன் றாண்மலர் சேவிப்பனே

## இராமசாமி தேசிகர்.

16. உவராழி சூழ்ந்த புவிமீதி லின்ன முழன்றுழன்று
பவராசி மூழ்கிப் பரிதபி யாமற் பழிசெய்பொறி
கவராம னூளு மடியார்ப் புரக்குங் கருணைவள்ளல்
தவராம சாமி குருபாத தாமரை சார்குவனே

## வீரசேகர தேசிகர்

17. அந்த நிறைவன்னி யம்பதி யாலய மாதியவை
சந்த முறவமைத் தெல்லையி லற்புதந் தான்புரிந்தே
யிந்த நிலம்புகழ் கோவிலூர்ப் பீடத் திருந்தருளி
வந்த குருவீர சேகரர் பாதம் வணங்குவனே

## அண்ணாமலை தேசிகர்.

18. கண்ணுயி ரங்கொண்ட வாசவன் சிந்தை களிப்புறவே
பண்ணுத வாதமெல் லாம்பண்ண வந்த பரசமயர்
நண்ணுத வண்ணநல் வேதாந்த வித்தையை நாட்டிநின்ற
அண்ணு மலைஞான தேசிகன் சேவடி யர்ச்சிப்பனே

## மகாதேவ தேசிகர்.

19. இந்த நிலமீது மந்த தரனுன வென்னையுந்தன்
சந்ததி யாரு ளொருவ னெனச்செய்து தண்கருணை
முந்து பொழிந்த வமிர்தப்ர வாக முகிலெனவே
வந்த மகாதேவ மூர்த்தியை யெப்போதும் வாழ்த்துவனே

### சோமசுந்தர தேசிகர்.

**20.** சிந்தை யறிதற் கதீத பரம சிவபத்தியும்
முந்து சூரவர் முதிர்பத்தி யுஞ்செய்த மூதறிஞன்
அந்த மிகுகோவி லூர்மடத் தின்கணெட் டாம்வடிவாய்
வந்த குருசோம சுந்தர வள்ளலை வாழ்த்துவனே

# வாழ்த்து

அறுசீரடி விருத்தம்

**21.** ஆதிகுரு சங்கரர்தம் பரம்பரையிற் சுருதிமுடி
யமிர்த மூட்டும்
வேதியர்சி காமணியாம் வித்தியா ரண்யகுரு
விமலர் தம்பால்
ஓதியனு பூதிபெற்ற சந்ததியார் சந்ததியா
யுலகில் வந்த
சோதிமுத்து ராமலிங்கர் திருமரபு நீடூழி
துலங்கி வாழ்க!



உ

ஸ்ரீ மீனுட்சி சுந்தரேஸ்வரர் துணை.

திருவாலவாய் என்னும்

**மதுரையம்பதியின்கண்**

எழுந்தருளி விளங்கும்

# ஸ்ரீ சொக்கலிங்கக் கடவுள் தோத்திரச் சதகம்.

★

ஸ்ரீ விநாயகர் காப்பு

கட்டளைக் கலித்துறை

சீர்தங்கு கூடல் வளர்சொக்க லிங்கச் சிவபெருமான்
பேர்தங்கு செந்தமிழ்ச் செய்யுட் சதகநூல் பேசுதற்குக்
கார்தங்கு கொண்டல் பொழிவதைப் போன்று கருணைபெய்யுங்
கூர்தங்கு மொற்றைவெண் கொம்புடை யைங்கரக் குஞ்சரமே. 1

கட்டளைக் கலிப்பா

ஏம சுந்தர விந்திரன் செந்தள
இண்டை யாசனன் றெண்டிரை வாழ்பரந்
தாம சுந்தர னேமுதல் வானவர்
தங்கள் கட்கரி தாகிய சிற்சிவ
காம சுந்தரி யங்கயற் கண்ணிதன்
காத லன்மது ராபதி காவலன்
சோம சுந்தரன் றன்சத கஞ்சொலத்
தும்பி மாமுக நம்பியைப் போற்றுவாம் 2

★

ஸ்ரீ சரஸ்வதி காப்பு

கட்டளைக் கலித்துறை

பண்டா ரணைஞ்சொல் பொருளா மதுரா பதிக்கடவுள்
தண்டார் சரோசச் சரணந் துதிசெந் தமிழ்ச்சதகங்
கண்டா யினித்திடச் சொல்லும் பொருளுங் கனிந்தருள்வாள்
வெண்டா மரைப்பதி வீற்றிருக் குங்கலை மெல்லியலே. 3

---

2. ஏமம் = இன்பம் இண்டை = தாமரை. 3. சரோசம் = தாமரை

கட்டளைக் கலிப்பா

மங்க லந்திகழ் மாமது ராபுரி
மகுட சுந்தர மாமணி மீதினிற்
சங்க நின்று தழைந்த தமிழ்ச்சொலாற்
சதக மொன்று தயங்க விளம்பிடப்
பங்க யாசனந் தங்கிய பாரதி
பனுவ லாட்டியென் பாலருள் செய்யவே
திங்க ளேர்வத னங்கொள் பிராமியத்
தேவி பூம்பத நாவிற் றுதிப்பனே 4

★

அவையடக்கம்

பன்னிருசீர்க் கழிநெடிலடி

ஆசிரிய விருத்தம்

சந்தமுறு நாற்கவிதை பாடவல புலவோர்கள்
தன்னிடை நிரம்புதகுதி
சார்ந்தவட வேங்கடந் தென்குமரி யாயிடைத்
தமிழ்கூறு நல்லுலகினில்
எந்தவிதம் வண்கவி யமைப்பது பழிச்சுவ
தெழுத்துமொழி பொருள்யாப்பெவை
யினியவணி பாட்டியல்க ளெவையெனத் தெரியே
னிலக்கண விளக்கமறியேன்
பந்தமுறு பாகநூ லறியாத பாசகன்
பழகிச் சமைத்துவிடல்போற்
பண்டிதர்க ளுவலர்கள் பாவலர்கள் சிலவரைப்
பழகிய பழக்கமதனுற்
கந்தமுறு சோலைசூழ் மதுரா புரிக்கடவுள்
கருணையை விழைந்துசதகங்
கழறினேன் சொற்பொருட் குற்றங் களைந்தெனைக்
காத்தருள லறிஞர்கடனே. 5

5. பாசகன் = சமையற்காரன்.

## நூல்

பூவோங்கு செந்தா மரைச்செல்வி கொண்கனும்
புதியதேன் பொழியும்வெள்ளைப்
புண்டரீ கத்துவளர் பூவைமண வாளனும்
பூங்கர முகிழ்த்துநிற்பக்
காவோங்கு பொன்னுலக வேந்துசாம் பூனதக்
காளாஞ்சி யேந்திநிற்கக்
கனதிமிகு தனதன்முத லவரவர்கள் பணிசெயக்
காரிகையர் வாழ்த்தியம்பச்
சேவோங்கு காட்சியை மறைத்துமகு டம்பூண்டு
தேவிமீ னும்பிகையுடன்
சிங்காத னத்திருந் தரசுநெறி கோடாது
செங்கோல் செலுத்துமரசே
தூவோங்கு மிந்துள வனத்தோங்கு தெய்வீக
சோமசுந் தரமூர்த்தியே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 1

மதிகொண்ட செஞ்சடையும்விழிகொண்ட திருநுதலு(ம்)
மகிழ்கொண்ட சுருதிவாயு(ம்)
மணிகொண்டகந்தரமு(ம்) மான்கொண்டசெங்கரமு(ம்)
மாசுணங் கொண்டமார்புங்
குதிகொண்ட விருபதமு மொளிகொண்ட மரகதக்
கொடிகொண்ட பாகவழகுங்
குவிகொண்ட மனதுடன் கண்கொண்டு பார்த்துநின்
குளிர்கொண்ட வருள்பெறுவனே
கதிகொண்ட புனல்வைகை நதிகொண்ட கரைவாவி
கமழ்கொண்ட கஞ்சமணமுங்

---

1. சாம்பூனதம் = நான்குவிதப் பொன்னில் ஒன்று
தனதன் = குபேரன் சே = இடபம் இந்துளம் = கடம்பு.

கார்கொண்ட தண்டலைத் தார்கொண்ட மன்றலுங்
கால்கொண்டு வந்துவீசத்
துதிகொண்ட வழகுபெறு(ம்) நிதிகொண்ட மாடநிரை
சூழ்கொண்ட மறுகுமழுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 2

குண்டம்பு ராசியி லிளம்பரிதி பலவெழுங்
கொள்கைபோற் பூத்தபொன்னங்
கோகனக மடுவிற் குடைந்துகரை யேறிவெண்
குறியெனும் விபூதிபூண்டு
கண்டந் திகழ்ந்திடக் கண்மணி புனைந்தென்
கருத்துருக வைந்தெழுத்துங்
கருதிமா ராயமொடு பொற்கோயில் வலம்வந்து
கனிதமிழ்க் கவிகள்வாயால்
விண்டம்ப கங்கணின் றுனந்த வெள்ளமிக
மேனிநனை யப்பொழிந்து
மேதினி மறந்துதிரு வருளனை விழுங்கயான்
வீடுபெறு(ம்) நாளுமுளதோ
தொண்டன்பின் வழிநின்று பொறிபுல னவித்தவர்கள்
துயர்கெட விளங்குபொருளே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 3

எள்ளிய பவம்பல வெடுத்தெடுத் திந்தநா
ளிம்மானு டத்தில்வந்தும்
எந்தைநின தருளுக் குரித்தாகி டாமலே
யிற்றைவரை யுங்கழித்தால்

---

2. தண்டலை = சோலை மன்றல் = வாசனை கால் = காற்று.

3. குண்டு = ஆழம் அம்புராசி = கடல் மாராயம் = உவகை. அம்பகம் = கண்.

ஒள்ளிய செழும்பகட் டூர்திவரு மேல்வையி
லொளிப்பிடமு முண்டுகொல்லோ
வுன்றிருப் பதமலா லிதுசமைய மடிமையிடை
யூறகல வருள்பொழிகுவாய்
தெள்ளிய தமிழ்ச்சுவை யறிந்ததிரை வைகையாற்
றெங்குபூ கஞ்செழித்துச்
செஞ்சாலி மென்கழை யரம்பை விளை வளமுறுந்
திருவால வாயிறைவனே
துள்ளியெழு சேற்கட் டடாதகையின் மகுடமுடி
சூடியுல காண்டருளுவோய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 4

திருவால வாயென்ற நின்பதியை யணுகாத
சென்மமொரு சென்மமாமோ
திரைபொருது பொற்றும ரைத்தடம் படியாத
தேகமுந் தேகமாமோ
கருவாரு மல்லலை யொழிக்குமுனை வலம்வராக்
கால்களுங் கால்களாமோ
கருணைவடி வேயென்று முடிமிசைக் குவியாத
கைகளுங் கைகளாமோ
மருவாரு மிதழிபுனை யுனையுமலை மகளையும்
வாழ்த்திடா வாயும்வாயோ
மனமுருகி யணிதுகிலு(ம்) நனையவின் போதகம்
வராவிழிகள் விழிகளாமோ

4. பகட்டூர்தி = யமன் செஞ்சாலி = செந்நெல் மென்கழை = கரும்பு அரம்பை = வாழை.

5. இன்போதகம் = ஆனந்தக் கண்ணீர்.

துருவாச முனிசொற்ற வொருசாப(ம்) நீக்கிமுற்
றும்பியை விணூர்விடுத்த
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 5

பூவா யிரங்கொடுன் பேரா யிரஞ்சொலிப்
பூசனை புரிந்துமறியேன்
புனிதமுட னைந்தெழுத் தோதியறி யேனினது
பொன்னடி யடைந்தவடியார்
மூவா யிரம்பெயர்கண் முதலாய வறுபத்து
மூவர்புகழ் கூறியறியேன்
முத்திநிலை யெந்தவித மெய்துவது தெரிகிலேன்
முழுமுதால் கருணைபொழிவாய்
கோவா யிரங்கொண்ட வுடலவா கண்டலன்
கோகனகன் விண்டுபரவுங்
கொண்டலுறு பைம்பொழிற் பூந்தராய்க் கவுணியர்
குலக்கொழுந் தங்காந்துசெந்
தூவா யிரங்கிடக் கனகவள் ளத்தமுது
சொரிகொங்கை மாதுபதியே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 6

சேற்றுக்கு ணடுநட்ட கம்பமென நிலையற்ற
தேகமுடன் வந்துதித்துச்
சிறிதுகா லத்தினிற் கண்டுமறை கனவெனச்
செப்புப்ர பஞ்சவாழ்விற்

---

6. முழுமுதால் = முழுமுதலே—(விளி) கோ = கண் ஆகண்டலன் = இந்திரன் பூந்தராய் = சீர்காழி.

சாற்றுக் கரும்புமொழி வனிதையர்க ளாசையுந்
தனவாசை முதலானவுந்
தந்தா வளம்பல விழுக்குமொரு கதலிபோற்
றமியனெனை யீர்த்தலைத்தாற்
கூற்றுக்கு விலகிநா னுய்ந்திடுத லெவிதமுன்
குளிர்கருணை மழைபொழிகுவாய்
குழகிய மணிச்சுடிகை பூண்டுலகை யாண்டபல
கொற்றவர் சமூகமெல்லாந்
தோற்றுக் குலைந்திடத் திக்குவிச யஞ்செய்த
துரையணங் குமைகணவனே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 7

சேதண் டருங்கமல பரிமளப் பீடம்வளர்
செந்திரு வணைந்துமகிழுஞ்
சீதரனும் வேதனுஞ் சுருதிகளு மின்றுவரை
தேடியறி யாதவுன்னை
வேதண்ட கூடவிட பஞ்செறியு(ம்) நறுமதுவை
விபுலைநட வாதமுடவன்
விழைவதென விழையுமென் விழைவெலா மெந்தவிதம்
விளைவாகு மோதெரிகிலேன்
கோதண்ட வொட்டாது பேரின்ப நிட்டையது
கூடவருள் பொழியவேண்டும்
கொங்கவிழு(ம்) நீபவண் காவனத் தூடருள்
கொழிக்குமுக் கட்கரும்பே

---

7. தந்தாவளம் = யானை கதலி = வாழை.

8. சேது = சிவப்பு வேதண்டம் = மலை கூடம் = சிகரம் விடபம் = மரக்கொம்பு விபுலை = பூமி நீபம் = கடம்பு.

சூதண் டகக்கொடிய வஞ்சர்களை விட்டுநற்
றெண்டரித யங்குலாவுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 8

மந்தர நெடுங்குன்றை மத்தெனக் கொண்டுபண
வாசுகி வடம்பிணித்து
வளமுறூஉம் பாற்கடலை வானவரு மசுரரு(ம்)
மதித்தவமை யத்தெழுந்த
செந்தழ னிகர்த்தகொடு விடமுண்டு கந்தரஞ்
செல்லென விருண்டுநாளுஞ்
சீவித் திருப்பதுன் றேவிகள மங்கலத்
திருநாணின் மாண்பதன்றே
அந்தர மளாவிவளர் வெள்ளிமலை நின்றிம்பர்
அவதரித் தடியோமெலாம்
ஆனந்த வாழ்வுற மொழிக்குமொழி தித்திக்கும்
அமுதவண் டமிழ்பொழிந்த
சுந்தரர் கவிக்காக வாரூரின் மறுகினிற்
றூதாய் நடந்தபரனே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 9

விற்கோட்டி யுதிரப் பெருக்கோட வெங்கணைகள்
விட்டவொரு புரவலற்கும்
மெய்நோவ வன்சிலை யெறிந்தவற் குஞ்செம்பொன்
வேத்திரங் கொடுபுடைத்த

---

9. மதித்த அமையத்து = கடைந்த காலத்தில் கந்தரம் = கழுத்து செல் = மேகம். 10. வேத்திரம் = பிரம்பு சொல் = நெல்.

கற்கோட்டு மலயவண் செழியற்கு முந்தைநாட்
கருணை தந் தாளவிலையோ
கடுகளவு குற்றமும் புரியாத வெனை நீ
கடைக்கணித் திலைமுறையிதோ
பொற்கோட்டு மேருவி னிழற்கோட்டி னுற்கதை
பொறித்தவற் பெறுதந்தையே
பூதிசா தனவழி வழாதவொரு மேழியன்
புந்திமகிழ் வாகவுலவாச்
சொற்கோட்டை யருளிமிடி கழிவுறச் செய்தசிற்
சுகவடிவ பரமசிவமே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 10

சங்கத்தி னிற்றூங்கு பொற்கிழியை வேட்டவொரு
தருமிக் களிக்கவிலையோ
சமணர்விடு கரியரவு பசுநூறி வழுதியர்க
டம்பய மொழிக்கவிலையோ
வங்கத்தில் வருவிறலி பிறகிடப் பத்திரன்
மனையவட் கருள்செய்திலையோ
வஞ்சிமன் னற்கு“மதி மலிபுரிசை” யெழுதியவர்
வறுமையை யொழிக்கவிலையோ
திங்கட் குலத்திறைக் கஞ்சியரை யிரவில்வரு
செம்பியற் காத்திலையோ
தீராத துனிகளுந் தீர்க்குமெந் தைக்கினிச்
சிறியனெனை யாளமலையோ

---

11. நூறி = கொன்று செம்பியன் = சோழன் துனி = துன்பம்
தொங்கல் = மாலை கடுக்கை = கொன்றை நிம்பம் = வேம்பு.

தொங்கற் கடுக்கையை மறைத்துநிம் பஞ்சொருகு
சோமசுந் தரமூர்த்தியே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 11

பாலமதி செருகியொளி ருச்சிமலி தேம்பலைப்
பாதுகைச் சரண(ம்) நீட்டிப்
பக்கலிற் றள்ளிமறை சொல்கின்ற சீருத்ர
பானீய மாட்டுமன்பர்
போலமன(ம்) நெக்குவிட் டோகைகொடு வாய்மல்கு
பொன்முகலி நீர்பொழிந்து
பொதுளிய முடிக்குடலை யிட்டபரி மளமதுப்
புட்பவகை பலதூவியுங்
கோலமுறு கைக்கொண்ட தேக்கடைக் கல்லை யிடு
கோட்டுமாப் புளிதமூட்டிக்
கூறுபொழு தாறினிற் கண்ணிடந் திடுமொருவர்
கொள்கையான் செய்யவலனே
சூலமதை மாற்றியொளிர் செங்கோ லெடுத்தநீ
துரிதம்வந் தாண்டருளுவாய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 12

சித்திரைப் பூரண சுதாகர னுதித்தவனி
திகழொளி பரப்பிநிறையச்
செந்தமிழ்க் கும்பமுனி தங்குமல யாசலத்
தென்றலது வந்துவீச

---

12. தேம்பல் = டழம்பூ பானீயம் = தீர்த்தம் பொதுளிய = நெருங்கிய தேக்கடை = தேக்கிலை கல்லை = தொன்னை கோட்டுமா = பன்றி புளிதம் = இறைச்சி.

எத்திசைக ளும்பரிம ளஞ்செயு மலர்க்காவி
    லினியதொனி பறவைபாட
ஏகாந்த னுகியே கமலாத னத்திருந்
    திருவழியி னேடும்வளியை
முத்திரை திகழ்ந்திடச் சுழிமுனை புகுத்தியே
    முதுநூன் மொழிந்தகுறிகண்
முழுவதுந் தவிராம லனுபவித் தின்பமய
    முதுகட லமிழ்ந்தவணமாய்ச்
சுத்தவடி வாகியே மீண்டுலகு தோன்ருத
    துரியநிலை யென்றுபெறுவேன்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
    சொக்கலிங் கக்கடவுளே. 13

சிப்பியினை வெள்ளியென வும்பரவு கானலைச்
    சீதநீர்த் தேக்கமெனவுஞ்
செயலறு கயிற்றையர வென்னவுங் கட்டையைத்
    திருடனென வுந்தெளிகிலா
திட்படி மயங்கல்போற் சச்சிதா னந்தமென்
    றெண்ணிடா திஃதுலகமென்
றெண்ணிவா ணுள்முழுது மிடரா லுழன்றுவரு
    மிதயமயன் மாற்றியருள்வாய்
முப்புடைகொ டென்னம் பசுங்காய் பரீஇப்பலவின்
    முட்பழ முடைத்துமாவின்

---

13. சுதாகரன் = சந்திரன் ஆரம் = சந்தனம் (சந்தனச் சோலை) வளி = காற்று (சுவாசம்)

14. பரீஇ = விழுந்து நீலம் = கருநெய்தல் தோடவிழும் = இதழ்கள் முறுக்குடைந்து மலர்கின்ற.

முதிர்பலங் கீண்டுவா ழைக்கனி சிதைத்திடலு(ம்)
மூவிரத வருவியோடித்
துப்பன நிறத்திதழ்த் தாமரையு(ம்) நீலமுந்
தோடவிழும் வாவிபெருதந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 14

திங்களெனும் வெண்குடை கவித்துமல யாசலத்
தென்றியிர தங்கடாவித்
திரையுததி முரசினை முழக்கிமட மானினியர்
சேனைக ணடத்திவந்து
கொங்குவிரி பூஞ்செங் கரத்திலகு மருணக்
கொழுங்கன்னல் வில்வளைத்துக்
கொளைசெயு(ம்) மிஞிற்றுநாண் பந்தித்து மலர்வாளி
கொண்மூ வெனப் பொழிந்தோன்
அங்கமழன் பற்றிமிக வடலைபட நோக்கு(ம்)நுத
லம்பகநி(ன்) னருள் பொழிகுவாய்
அருமறை யுணர்ந்தவர்கள் புரியெரி மகத்தூம
மைந்தரு மணந்தரும்பூந்
தொங்கலணி யும்பருல கம்புபச் சுனைசேர்ந்து
துணரையிம(ம்) நிகரவாட்டுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 15

---

15. தென்றி = தென்றல் உததி = கடல் கன்னல் = கரும்பு
கொளை = இசை ஞிமிறு = வண்டு கொண்மூ = மேகம்
அடலை = சாம்பல் அம்பகம் = கண்.

ஆயிரங் கவலைக்கு ளநியாய மாயென்னை
யவமே படைத்தவிதனை
அதிகந் தெரிக்கின்மன தாறுமோ தேறுமோ
வானுலு மிதுவரைக்கு(ம்)
நீயிரங் காதவகை தெரிகிலே னுலகத்துள்
நினைமறுப் பாருமுண்டோ
நீதியோ விதுதரும மாகுமோ விதுநிற்க
நீளிமய கிரிபயந்த
தாயிரங் கிடிலென்ன தாழ்வுவரு மவளுஞ்
சதாமவுனி யாகிவிட்டாள்
தந்தைகல் லானதாற் றனதுளமு மதுகொலோ
தமியனெனை யாளவேண்டுந்
தோயிருங் கலைமதியை மாடமிசை யேந்திழையர்
சுடர்முகுர மென்னநோக்குந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 16

வெல்லும் படிக்கரிய புலன்வெல்ல விடயங்கண்
மித்தையெனு முணர்வுமில்லை
வீசும் பிராணனை யடக்கியது செய்யவோ
மேலாய திடமுமில்லை
யல்லும் பகற்பொழுது மெந்தநே ரத்திலுமு
னடியிணையு மைந்தெழுத்தும்
அடியனேன் மறவாத வண்ணமொரு நல்லவர
மருளினுல் யானுய்குவேன்
செல்லும்பர் கண்படும் பொழிலுடுத் தோங்கிவளர்
திருமறைக் காட்டுமுனிவர்

---

16. முகுரம் = கண்ணாடி. 17. மித்தை = பொய்.

சினகரந் துயில்பொழுது கனவில்வந் தெமதழகர்
செயல்களைப் பாடுதியெனச்
சொல்லும் பசுஞ்செழிய மரகதப் பூங்கொடி
சுகித்துமகி ழின்பவடிவே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் ககடவுளே 17

கல்லுக்கு ளுற்றிடுந் தேரைக்கு மழவிளங்
கருவுற்ற வுயிர்களுக்குங்
கனிவுற் றிரங்கியவை காத்திநீ யல்லேயோ
கரைவுற் றிறைஞ்சிவந்தும்
மல்லுக்கு வந்துற்ற பேர்கணெஞ் சம்போன்று
வலிதுற் றிருந்துவந்தால்
மகிமையுற் றிலகுநின் றிருவருட் கழகோநல்
வாழ்வுற் றிருக்கவருளாய்
செல்லுக்கு நேருற்ற மேனிநெடி யோன்றனது
சேதுற்ற விழிகொடுப்பச்
செங்கரத் துற்றொளிர வொளியாழி யொன்றுவகை
சிந்தையுற் றிடவளித்தோய்
சொல்லுக்கு மனதுக்கு மெட்டாத பொருளெனச்
சுருதிமொழி பிரமவடிவே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 18

வீட்டுக் குரித்தாய சாதன மமைந்தகதி
வேட்கையர் பிறந்தவுலகில்
விண்டுபா லாழிவரு சுறவென்ன வினையேனை
வெறிதினிரு மித்துவிட்டாய்

---

18. ஆழி = சக்கராயுதம்

19. விண்டு = விஷ்ணு பாலாழி = பாற்கடல் சுறவு = மகரமீன்
குரம் = குளம்பு துறுமி = நெருங்கி.

ஏட்டுக் கடங்காத வின்னலெல் லாமுனக்
கெத்தனை யெடுத்துரைப்பேன்
இன்னமு மிரங்கவிலை யேநினது திருவுள்ள
மினியேனு மருடியையா
சேட்டுச் செழும்பசிய நெட்டிலை தழைந்திளஞ்
சித்திரப் பாளை விரியுந்
தெங்குகளி லிரவிரத வேழ்பரி குரம்படச்
சிந்துமிள நீர்விரைந்து
தோட்டுக் கொழுங்கமல வோடையிற் கழனியிற்
றுறுமியலை வைகைபெருகுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 19

தேன்மதுக் கொழுமடற் செங்கமலம் வாழுமிந்
திரைகொண்க னுந்திமலரிற்
சென்னஞ்செய் விதியான் பிறப்பதற் கனுதினந்
தீட்டிவரு மாணிமுறிபக்
கூன்மதிப் பிளவனைய வளையெயிற் றகலவாய்க்
குண்டுகட் கரியமேனிக்
கொடியநமன் வீசியெறி நெடியதிண் பாசம்வெகு
கூறு யறுந்துசிதற
நான்மதிப் பிடவரிய தாயெற் கமைத்தவெழு
நால்கோடி நரகளெள்ளல்

---

20. தேன்மது = தேனுகிய மது இருபெயரொட்டுப் பண்புத் தொகை, கமல பங்கயம் சந்திர மதி யென்பது போல இந்திரை = மகாலெட்சுமி விதி = பிரமன் ளெள்ளல் = பள்ளம் திடறு = மேடு. மதக் கடகரி யுரித்துத் தோல் தரித்த என்று கூட்டுக.

நன்ருக வேதிடறு படவடிமை முடியிலுன்
ஞண்மலர்ப் பாதம்வருமோ
தோன் மதக் கடகரி யுரித்துத் தரித்தசிவ
சோமசுந் தரமூர்த்தியே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 20

நறைதங்கு கோகனக மலர்தங்கு நான்முகனு(ம்)
நந்தாதி தங்குகரனு(ம்)
நனைதங்கு மைந்தருவெண் மாதங்க வாகனனு(ம்)
நற்றங்க வுலகமரரும்
அறைதங்கு சுருதியு மனந்தங் கரைந்துமுணர்
வருமைதங் கும்பொருளறிந்
தாசுதங் கும்பிறவி விவிதங் களைந்துநான்
அமிர்தங் கலந்திடுவனே
பிறைதங்கு செஞ்சடையி லாயிர முகந்தங்கு
பெண்டுதங் குங்குழகனே
பிரமரந் தங்குதுண ரிந்துளந் தங்குபவ
பெருமைதங் குயர்வைகையின்
றுறைதங்கு(ம்) ஞானமுனி வரர்தங்கி வாழுஞ்
சுபந்தங்கு கூடலரசே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 21

பொல்லாத பிறவியினி வேண்டிலேன் வேண்டிலேன்
புனிதவுன தருணினைந்தே
பொழியுமழை போலவிரு விழிநீர் பெருக்கிநின்
பூவடிகள் சாரவருள்வாய்

---

21. மாதங்கம் = யானை தங்கவுலகு = பொன்னுலகு அறை = சொல் (உதாத்தாதி சுரவடிவ சப்தம்)

அல்லாது பிறவிதரின் ஞானிதிரு வெண்காடர்
அருணகிரி நாதர்போரு
ராள்சிதம் பரதேவர் தாயுமா னவர்வட
லருட்சோதி வள்ளலார்போல்
நல்லாத ரம்பெருது பிறவிதந் துயர்முத்தி
நல்குவது மெந்தைகடனும்
நனையவிழும் வடநிழலி லொருநால்வர் தெளிவுபெற
நான்மறை யுரைத்தவொன்றைச்
சொல்லாது சொல்லியருண் ஞானகுரு மூர்த்தமே
சுத்தமே யமிர்தமயமே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கட வுளே. 22

ஓதியு முணர்ந்தும் பிறர்க்கெடுத் துரைதந்தும்
உற்றதன் மனேலயமிலா
வொருபேதை யிற்பேதை யாரிலெனு(ம்) முதறிஞர்
உரைமொழிப் பொருளாயினேன்
றீதியலும் வன்மனப் போக்கொழிந் தெம்பிரான்
செஞ்சரண முள்கியுள்கிச்
சீதமுறு கட்புன லுகுத்துகுத் தென்றுநின்
றிருவருட் காளாவனே
கோதியலு(ம்) மனதுடன் குருமனையை வாஞ்சித்த
கொடியனுடல் கூறுபடவாள்
கொண்டுசே தித்துநன் னிதிநெறி நாட்டவல
கூடலம் பதிநாயக

22. நனையவிழும் = அரும்பு மலர்கின்ற வடம் = ஆல் (கல்லால்)

23. சேதித்து = அரிந்து

சோதியவிர் வேலினெடு வனைசெண்டு வுக்கிர
சுதற்கருளி யாசிபுரியுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 23

விட்டிற் பதங்காதி யொளியாதி வீழ்தலென
விடயங்க ளைந்தின்வீழ்ந்து
வீணாக விளமையாம் பருவங் கடத்திமேன்
மேனிதளர் முதுமைதன்னிற்
கட்டிற் கிடந்துதரை பாயிற் படுத்துவெங்
காலனுக் காளாகும்வன்
கவலைகளை மாற்றியொளிர் கனகமன் றுடுனது
கஞ்சமென் சரணடைவனோ
வட்டிற் றதும்பநிறை ஞானவமு தம்பருகி
வண்டமிழ்க் கவிதைபொழியும்
வளமிகுங் கழுமலக் கவுணியர் கொழுந்துக்கு
வாரியருள் பொழியுமரசே
சுட்டிற் கடங்காத சுடர்ஞான வடிவென்று
சுருதிமொழி பெரியபொருளே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 24

அரிவனைக் கும்புவியின் மனிதவடி வாகிவரல்
அரிதரிதெ னுமறைகளும்
அறிஞர்களு மறைகுவ தறிந்திருந் துங்கதியில்
ஆர்வமொரு சிறிதுமின்றி

---

24. பதங்கம் = பறவை கழுமலம் = சீர்காழி

வரிவளைக் காந்தளங் கரமுடையர் பாலுமொளிர்
மாசையினும் ஆசைமீறி
வங்கூ ழிடைப்பட்ட மென்பூளை போற்சுழலு(ம்)
மனதுட னுழன்றுமேலுங்
கரிவளைக் குஞ்சிங்க(ம்) நிகர்கொடிய தாமகங்
காரத்தின் வசமதாகிக்
காலங் கடத்திவரு மெளியனே னென்றுநின்
கருணைக் குரித்தாவனே
சுரிவளைக் குலமீன்ற மணிகளைச் சினையென்று
தூவியன மடைகிடக்குந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 25

வேன்முதிர் நெடும்புறவின் மீனமதி நண்பகலில்
வெய்யிலி னடக்குமொருவன்
மிஞிறுமுரல் விரிமடற் பரிமளப் பூங்காவின்
மேவிமகிழ் வாதலேபோற்
கான்முதிர் பெருங்கழுதி ரதமித்தை யுலகவெங்
காட்டிடைத் திரியுமடியேன்
கமழுங் கடம்படி முளைத்தநின் சரணகோ
கனகமுற் றின்புறுவனே
கூன்முதிர் விலாமதி புனைந்துதுத் திப்பணக்
கோளரவணிந்தமுடியிற்
குமிறுகல் லோலமந் தாகினி தரித்திருவர்
கும்பிட நடித்தவரசே

25. அரி = கடல் வரி = தேமல் மாசை = பொன் வங்கூழ் = காற்று சினை = முட்டை.

26. வேல் = கருவேல் புறவு = முல்லைநிலம் மீனமதி = பங்குனி மாதம் மிஞிறு = வண்டு கழுதிரதம் = பேய்த்தேர் (கானற்

கூன்முதிர் வளைக்குவா லீன்றதர ளங்கள்
சுனைக்கரையி னிலவெறிக்குந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 26

பத்துவித மானதிக் கெங்கணு(ம்) நிறைந்துமப்
பாலும் பரந்துநின்ற
பரமவான் பொருளென்று பழமறை முழங்கு(ம்)நின்
பாததா மரைபிடிப்போர்க்
கத்துவித வானந்த நிட்டையருண் மூர்த்தியுனை
யணுகா தலந்துபோனேன்
ஐயனே யரசே யரும்பொனே யினியேனும்
அஞ்சலென் றுண்டருளுவாய்
முத்துவித முந்தவள நத்துவித முந்தந்தி
மூரியங் கோட்டுவிதமும்
மோதவச் சந்தகில் விதங்களுந் திரைவீசு(ம்)
முதுவைகை நதியினிருபாற்
றொத்துவித மலரச் சுரும்பினம் பண்பாடு
சோலைமிசை நீலமுகில்சூழ்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 27

---

சலம்) கூன் = வளைவு முதிர்விலாமதி = இளம்பிறை துத்திப் பணம் = பொறியையுடைய படம் குமிறு கல்லோலம் = முழங்கும் அலை மந்தாகினி = கங்கை வளைக்குவால் = சங்குக் கூட்டம் தரளங்கள் = முத்துக்கள்.

27. அலந்துபோனேன் = துன்பப்பட்டே போனேன் முத்து விதம் = முத்து வகைகள் பலவும் தவள நத்துவிதம் =

நீடகம தாயவிப் பிரபஞ்ச(ம்) நிலையல்ல
நீள்கன வெனத்துறந்தே
நிலையுற்ற பொருள்பெற்ற பூம்புகார்த் துறவரசு
நிமலவெண் காடர்முதலா
வீடக மடைந்தபெரு(ம்) ஞானியர்க ளெத்துணையர்
விமலவுன் பூரணத்தே
வினையனேன் சார்வதற் கிடமில்லை யாகுமோ
வேலைநதி நீர்கொளாதோ
பாடக மிசைப்பவெளி நாடக(ம்) நடிக்குமொலி
பனைமடற் சேரனறியாப்
பண்பினெடு சற்றுள(ம்) மயங்கிடச் சுந்தரன்
பாடலமு தம்பருகுவோய்
சூடக மணிந்தகர மாதர்நட மாடிடுஞ்
சுந்தர வரங்க(ம்) நிறையுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 28

பெற்றபொரு ளெத்துணைய தாயினு மலம்புத்தி
பிறவாது பெற்றிடாத
பிறிதுபொருள் சிறிதேனு மதுபெறத் தெருமந்து
பிரமரம் போற்றிரிகுவேன்
கற்றபொருள் கைவரப் பெற்றுமகி ழாமலே
கல்லாத காமுறுவனே

---

வெண்மையுடைய சங்கு வகைகள் நந்து நத்து என வலித்தல் பெற்றது. மோதவச் சந்து = மணமுடைய சந்தனக் குறடு தொத்து = பூங்கொத்து.

28. பூம்புகார் = காவிரிப்பூம்பட்டினம் பாடகம் = பாதகடகம். சூடகம் = கைவளை.

கரணமொடு வருகின்ற பிறவியினு மஃதற்ற
கல்லாகி வருதனன்றே
யுற்றபொரு ளிதுவெனத் தெற்றென விளங்காம
லுண்மைபெறும் வேட்கையுளரா
யுள்ளன்பு கொண்டுதொழு சனகாதி நால்வர்க்கு
மோராலி னிழலின்கீழ்ச்
சொற்றபொரு ளனுபூதி யெற்குமுற நின்னதருள்
துணையென்று நம்புகின்றேன்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 29

கார்வைத்த மேனிநமன் வந்திடுவ னென்றசங்
கற்பமோ வற்பமில்லேன்
கஞ்சமலர் வாழயன் பிறவிதரு வானென்ற
கவலையோ சிறிதுமில்லேன்
நீர்வைத்த செஞ்சடைகொ ணீயிருவர் தொழின்மாற்றி
நிமலவீ டருள்வதெண்ணேன்
நின்னடி வணங்கிலே னினதருள் விழைந்திலேன்
நீரம்விழி சிந்திலேனே
தார்வைத்த கூந்தலார் பார்வைத் தடம்புணரி
தாழ்ந்துபடி யாதசித்தர்
தங்கள்பால் வைத்தகுறை யாவுந் தவிர்த்துமேற்
சமாதி பெறவிரும்புஞ்

---

29. அலம் = அமையும் என்றல் தெருமந்து = சுழன்று பிரமரம் = வண்டு.

30. சோர்வைத் தவிர்த்தருளி = (நமக்கு, சமதமாதி சாதனங்கள் கைகூடவில்லையே யென்றிருந்த) சோர்வை நீக்கியருளி; அதாவது சாதனங்கள் பூர்த்திபெற அனுக்கிரகஞ் செய்து என்று பொருள்.

சோர்வைத் தவிர்த்தருளி யழியாத முத்தியருள்
சோமசுந் தரமூர்த்தியே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 30

புரகர கடம்பவன சுந்தர நறுங்கருப்
பூரசுந் தரவாலவாய்ப்
புனிதநற் கூடலம் பதிவாச மரகதப்
பூங்கொடிப் பாங்கரழக
அரகர மகாதேவ அரகர மகாதேவ
அரகர மகாதேவவென்
றன்புமிக வோலமிட் டின்பநட மாடியுன்
னருளுக் குரித்தாவனே
உரகபதி பூடண துவாதசாந் தேசவொளி
யுயர்சீவன் முத்திபுரம்வாழ்
உம்பரர சேயெங்க டம்பிரா னபயம்
முனக்கபய மென்றுகதறிச்
சுரகண மிகத்தொழுது கைகூப்ப வருள்செயுஞ்
சோமசுந் தரமூர்த்தியே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 31

பேதவா தங்கழறி வேதவழி வாராத
பிறசமைய மேகமெல்லாம்
பெரியதொரு சைவவெளி படரா தடித்திட்ட
பிரசண்ட வாதவரசாம்

---

**31.** அபயம் என்பதிலுள்ள மகரவொற்று, ஓசை நிறைத்தற் பொருட்டு வந்தது; அதாவது ஒற்றில்வழி வந்த ஒற்று. சுரகணம் = தேவகூட்டம்.

**32.** சூத ஆராமம் = மாமரச் சோலை பூகம் = கமுகு.

வாதவூ ரன்பர்முதலோ துமதி தீவிரர்முன்
வந்தவொரு கருணையாளன்
மந்ததர ஞகிய நமக்குமெதி ரிந்தநாள்
வருமோ வெனக்கவலுகேன்
போதவா னந்தமுத விடுமிந்த மலிதவுடல்
போயொழியி னேதுவருமோ
புரிசஞ்சி தத்தினு ளிருப்பதறி யேன்பிறவி
போதுமெனை யாண்டருளுவாய்
சூதவா ராமமொடு பூகமுயர் தெங்கினிய
சுளைமுட் கனிப்பலவுசூழ்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 32

உற்ருர் வெறுத்திடு மகாபாதகஞ்செய்த
வொருவனுக் கருள்புரிந்தாய்
ஒள்ளிய சிறைக்கருங் குருவிக்கு முந்தைநாள்
உபதேச மொன்றுசெய்தாய்
பொற்ரு மரைத்தட மிருந்தநா ரைக்குனது
பூஞ்சரண வீடுதந்தாய்
புவியிலின் னம்பல வுரைக்கரிய வஃறிணைப்
பொருள்கட்கு மருள்பொழிகுவாய்
அற்ரு ரலந்தார்க ளெல்லார்க்கு முதவுநின்
னருண்மகிமை யென்னேயெனே
யன்புக் கிரங்கிடுங் கருணையங் கடலென்னும்
அறிஞருரை பொய்யல்லவே

---

33. அற்ருர் = வறுமையாளர் அலந்தார் = துன்பமுற்ரேர் சுற்ருவரும் = சுற்றி வரும் அல்லது சுற்ருக வருகின்ற என்றுகொள்ளினும பொருந்தும்.

சுற்று வருங்கரும் பாலையொலி குஞ்சரந்
துரிதமொடு குளிறலொக்குந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 33

மங்கலந் தங்கியொளிர் பூதிசா தனவாழ்வு
வழுதிநாட் டோங்கிவளர
மந்திரி குலச்சிறையு மானினேர் விழிகொண்ட
மங்கையர்க் கரசியாரும்
இங்கெழுந் தருளியெம திறையைநேர் செய்துசமண்
இகலழித் தெம்மையெல்லா
மீடேற்றி யருள்கவென் றெழுதுதிரு முகமதேற்
றெய்தியருள் செய்தபெருமான்
றிங்களங் கொளிர்மனைச் சண்பையிற் றேடுடைய
செவியனென வாய்மலர்ந்து
சிறுவிரற் சுட்டியறி வித்தனன் சுட்டற்ற
சிவபரஞ் சோதியுனையே
தொங்கலங் கொன்றைமுடி யெந்தைநீ யன்பராந்
தொண்டர்வச மாவையன்றே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 34

கோடவிழு மென்மலரும் வல்லிமல ருந்தடங்
குண்டுமல ருங்குமலருங்
கொண்டுகர மலராலு னடிமலரி லாயிரங்
கூற்றுமல ரோடுமிடுவார்

---

34. சண்பை = சீர்காழி தொங்கல் = மாலை.
35. குமலர் = நிலப்பூ (கு = பூமி) ஆயிரங்கூற்று = ஆயிரஞ் சொல் (சகஸ்ரநாமம்) ஏடவிழும் மலரவன் = பிரமன் ஆக

ஏடவிழு மலரவனும் ஆகவிழி மலரவனு
மேங்குமல ரகிதநிலையை
யெய்தவிழி மலருவா யொருமலரு மிட்டிலேற்
கென்றுதிரு வுள்ளமலர்வாய்
வாடவிழு தண்பனிக் காலமுளர் சீதள
வடந்தைமிக வந்தடிப்ப
மாருது கம்பலைகொள் வன்புறக் கூன்கமடம்
வாலுக(ம்) நிரம்புபுளினந்
தோடவிழு(ம்) முண்டகச் சுனைகடந் தேறியெறி
சுடர்வெயிற் காய்ந்துமீளுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 35

கூற்றென நடந்துவரு சீற்றமத குஞ்சரங்
கும்பிட வடக்கியெழுநாக்
கொழுவியெரி செய்யதழ னீற்றறையின் வெம்மையைக்
குளிர்வுற வமிழ்த்தியதன்மேற்
காற்றலை முழக்கமிகு கார்க்கடலி லேகருங்
கற்புணை செலுத்திமெதுவாய்க்
கரைசேர்ந்து பிறவாத கதிசேர்ந்த நாவரசு
கனிதமிழ்ச் செய்யுண்மகிழ்வாய்
போற்றவகை தெரியாது சாற்றிவரு மென்னுடைய
புன்கவியி லின்புறுவையோ

---

விழி மலரவன் = இந்திரன், மலரகிதநிலை = நிர்மல பிரஹ்ம ரூபஸ்திதி உளர் = தூவுகின்ற வடந்தை = வடகாற்று கம்பலை = நடுக்கம் கமடம் = ஆமை வாலுகம் = வெண் மணல் புளினம் = மணற்குன்று (கமடம், சுனை கடந்து புளினம் ஏறி காய்ந்து மீளும் என்று கூட்டுக)

36. எழுநா = அக்கினி கற்புணை = கற்றூணுகிய தெப்பம்.

புனிதநின் றுதிகவிகள் பாடாது பேசியென்
பூசிதங் கண்டதையா
தோற்றுசக சீவபர மேழைந்தின் மேற்பட்ட
சுத்தமெனு மத்துவிதமே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே 36

வடவால நீழலுறை காலமோ மூவர்தமிழ்
மகிழ்கின்ற சமையமிதுவோ
மணிவாச கங்கேட்கு மேல்வையோ கோவைநூல்
வரைகின்ற வேளை தானோ
கடவார ணம்பெருகு சேரற்கொர் திருமுகக்
கவியெழுது பொழுதாங்கொலோ
கல்லாட நூறகவல் கேட்டுளங் களிகூர்ந்து
கலைமுடி துளக்கமைபமோ
திடவாத ரஞ்சற்று மின்றியவ னென்றடிமை
செப்புமொழி செவிகொளாதோ
திருவுள மிரங்கியெனை யாண்டருள வேண்டினேன்
செறிசுரந் தாவானலஞ்
சுடவாரி யுண்டமுகி விளையா ளெனும்பசிய
சுகுமாரி பங்கையுடையாய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 37

---

37. திடஆதரம் = அழுத்தமான பக்தி சுரம் = காடு தாவானலம் = காட்டுத்தீ (ஆரணியத்தில் காட்டுத்தீ தகித்துக் கொண்டு வரும்போது அதனை வாரியுண்ட மேகவண்ணரான கண்ணபிரானுக் கிளைய சுகுமாரி என்று கொள்க) சுகுமாரி = மென்மையுடையாள்.

மனையாடு மாடுநம் மனைவிமக வாதிபொன்
வயல்காணி பூமியென வே
வாஞ்சனைக் கிடமாய விவையாவு மாயையால்
வந்தகன வென்றுகருதி
நினையாடி யாடித் துதித்திருகை கூப்பியே
நெஞ்சநெக் குருகியிருகண்
ணீர்பொழியு மேதக்க வார்வலரை யாளுவாய்
நினையாத வெனையாள்வையோ
சினையாடி டுஞ்சரக(ம்) நனையவிழ்த் தினியசெந்
தேன்பருகு பூங்கடம்பார்
திருவால வாயிறைவ சிவைபாக வெனநிதஞ்
செம்பொற் சரோருகப்பூஞ்
சுனையாடி யேறிவெண் டிருநீ றணிந்தமரர்
தோத்திரம் புரியுமரசே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 38

கெண்டையுக ளும்பணைக் குண்டையூ ரன்பர்நெற்
கிரிகமலை மறுகின்வரவுங்
கிளிகூவு பூம்பொழிற் புகலூரி லிருசெங்கல்
கேழ்விரியு(ம்) நிதியாகவும்
பண்டையுக முதலா யிருந்துவரு பழமலைப்
பதியின்மணி முத்தமிடுபொன்

---

38. சினை = கிளை சரகம் = வண்டு செம்பொற்சரோருகப் பூஞ்சுனை = பொற்றாமரைக் குளம்.

39. உகளும் = குதிக்கும் பணை = வயல் கமலை = திருவாரூர் கேழ் = ஒளி இண்டை = தாமரை மகரந்தம் = பூந்தேன் தவள சிந்துரம் = வெள்ளையானை.

பரவைமகி ழத்திருக் கமலால யத்தடம்
பண்பினெடு வந்தெய்தவும்
இண்டையுக மகரந்த மிகுதிபொழி சுனேமுதலே
யிளமதலே கான்றுவிடவும்
இன்னமு மியம்பரிய வெத்துணேய வற்புத
மியற்றவல நாவலூரர்
தொண்டை யுக வாநின்று கைலேயிற் றவளசிந்
துர(ம்)நடவும் வரவையேற்ற
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 39

தம்பன மியற்றிடிற் றழலூதை நீரிலுறு
சக்திக ளபாவமுறல்போற்
சச்சிதா னந்தமாய் நின்றிடிற் சகமாயை
சற்றுமில தாகுமெனவே
நம்பனரு மறைமுடிப் பொருடருங் கைவல்ய
நவநீத(ம்) நவிலும்வண்ண(ம்)
நானந்த வுண்மையறி வானந்த மாய்நின்று
நகுமயல் கடக்கவருள்பூங்
கொம்பன மடந்தைசுர பதிசுதை யெழிற்றேவ
குஞ்சரி யிருக்கமலேயின்
குளிர்சாரல் விளேபசிய வேனலங் கானலுறு
குறவள்ளி கொவ்வையதரஞ்
சும்பன மிடச்சென்ற நம்பியைத் தந்துதவு
சுடரங்கி நெற்றிவிழியாய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே 40

---

40. ஊதை = வாயு அபாவம் = இன்மை சுரபதி சுதை = இந்திரன் மகள் தெய்வயானே சும்பனம் = முத்தம்.

இகவாம லிதுநமக் கிதுநமக் கென்றுதின
மீட்டுவன யாவுமுடிவில்
எட்டுணையு முதவாம னுகர்வினை புசித்தவுடன்
இயைபறுத லேத்தெரிந்தும்
மிகவாத ரித்தைந்து விடயங்க ளேகருதும்
வேட்கைகளை முற்று(ம்)நீக்கி
வேதமுடி யாடுனது பாதசர சீருகநல்
வீடுபெற விழைகிலேனே
மகவானை யுற்றபழி முனைநா ளொழித்தருளி
வருடமுதன் மேடமதியின்
வட்டநிறை பூரணைத் திதிநாளி லேவந்து
வந்துவந் தனைபுரியெனுச்
சுகவான கஞ்செல விடுத்தருளு மொளிருமுச்
சுடர்விழிக் கருணைவடிவே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 41

கெட்டமதி கொடுவறிது கெடுமதிக வாதங்
கிளத்துமதி மூடருடனே
கிட்டுமதி சாராம லிட்டம தியைந்திடக்
கேண்மதியெ மையமொழிவேன்
சிட்டமதி யாளரொடு சேருமதி தந்தெனது
சித்தமதி லுள்ளமலினந்
தீர்த்துமதி போன்றவுப சாந்தம திலங்கிடுஞ்
சீதமதி தந்தருளுவாய்

---

41. நுகர்வினை = பிராரப்தகர்மம் சரசீருகம் = தாமரை மகவான் = இந்திரன் மேடமதி = சித்திரைமாதம்.

42. இட்டமது இயைந்திட எனக்கொள்க; கேண்மதி = கேட்பாயாக (மதி முன்னிலையசைச் சொல்). வருணமதியம்புமுடி =

வட்டமதி சூடாது வருணம தியம்புமுடி
வாலமதி சூடுமரசே
மாயன்மதி பாற்கடலில் வருமதிக விடவெம்மை
மாற்றுமதி யுள்ளமணியே
துட்டமதி மூவசுரர் மூன்றுமதி னகைசெய்து
சுட்டமதி யாளனுன
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 42

இந்தமா னிலமீது வந்துமா னிடவடிவ
வியமான னெனவுதித்தும்
எம்மானை நினைகிலா தெங்குமா னெனவோடி
யிடையுமா னதனுகியே
பந்தமா னதிலுழலு மடிமைமான் முதலோர்கள்
பரவுமான் மியவடிகளிற்
பத்திமா னுகியே யுரைமான முணராத
பரமான நிலைபெறுவனே
கந்தமான் மததிலக வதனமான் சீகரக்
கங்கைமான் றங்குசடையாய்
கம்பமான் மதகயப் பிடர்விமா னத்துளாய்
கன்றுமா னின்றகையாய்

---

வருணம் அது இயம்பும் முடி எனப்பிரித்து கங்கை முழங்கும் சிரசில் என்று பொருள் கொள்க; அது பகுதிப் பொருள் விகுதி வாலமதி = பாலசந்திரன் மாயன் மதி பாற்கடலில் = மகாவிஷ்ணு கடைந்த திருப்பாற்கடலில்.

43. மானிலம் = மால்நிலம் = பெருமைபெற்றபூமி இயமானன் = ஜீவன் இடையுமானதன் = உடையும் மனதையுடையவன் உரைமானம் உணராத = ஆகமப்பிரமாணம் கோசரியாத (அதாவது வாக்கின் சக்திவிருத்திக்கெட்டாத) கந்த மான்

சொந்தமா னிமயமலை தந்தமான் பாகசிற்
 சுகமான பெருமானெனுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
 சொக்கலிங் கக்கடவுளே 43

புழுவைமுதல் விண்ணோர்கள் குழுவையீ ருகவரு
 புவனசர மோடசரமாம்
பூதகா ரியவடிவ(ம்) மித்தையென வேதமுடி
 புகல்வதை யறிந்திருந்தும்
அழிவையுறு மிவ்வுலக(ம்) நிலையல்ல வெனுமெண்ண
 மணுவளவு திடமுருதே
யம்பரந் திரிசிரற் சிறகெனவி(ம்) மனதினுக்
 கலைவுகற் பித்ததெவரோ
மழுவையொரு கரமேந்தி யுழுவையின் றோல்சுற்றி
 வழுவையுரி போர்த்தபரனே
வருடம்வரு டந்தோறு மேடமதி யொளிர்கின்ற
 வட்டமதி நாளில்வந்து
தொழுவைநம தருள்பொழிது மென்றுசொலி வாசவன்
 றுன்பந் துடைத்தவரசே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
 சொக்கலிங் கக்கடவுளே 44

---

மதம் = வாசனைபொருந்திய கஸ்தூரி சீகரம் = அலை கம்ப மான் மதகயப்பிடர் = கம்பமால் மதகயப்பிடர் எனப்பிரித்து அசைந்துகொண்டிருக்கும் பெருமையுடைய மதயானைகளுடைய பிடரிகள் என்று கொள்க (அஷ்டகஜங்கள்)

44. அம்பரம் = ஆகாயம் சிரல் = சிச்சிலிப்பறவை உழுவை = புலி வழுவை = யானை.

அள்ளியமு தம்பொழியு மானந்த மேகமென
வருமறை முழங்குபொருளை
யடைவதற் கேதுவாஞ் சாதன(ம்) நிரம்புதற்
காதியினி லாசையறவோ
யெள்ளியிடு மைம்பொறியின் விடயங்கண் மித்தையென
வெட்டுணையும் வந்ததிலையே
யேழ்பிறவி வாரியினை யெந்தவித(ம்) நீங்குவேன்
எந்தைநீ கருணைபுரிவாய்
தெள்ளிய நறுந்தமிழ்த் தீங்கடலின் "அன்பினைந்
திணை"யென வெடுத்த சுதையைத்
தித்திக்க வான்புலர் செவியும்விழி யுங்கொளச்
செய்தசிவ ஞானவிறையே
துள்ளியெழு வாளைவெடி போய்நெடிய தெங்கினிற்
றுன்றிளங் காயுதிர்க்குந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 45

விஞ்சுபொழி லேழுமெழு தீவுகளு(ம்) மேருவொடு
வேதண்ட(ம்) நாலிரண்டும்
வேலையு ளமிழ்ந்தவரு காலத்து மழியாத
மெய்ப்பொருள தாயிருந்தே
மஞ்சுபொழி நீரமென வாரியருள் பொழிகின்ற
வள்ளலாய் நீயிருக்க
மாதாபி தாவற்ற மதலையென வடியனேன்
மாநிலந் தனிலுழன்றே

45. சுதை = அமிர்தம் வெடிபோய் = மேலே தாவி துன்று = நெருங்கியுள்ள.

46. நடலை = துன்பம் சொற்கதிர் = நெற்கதிர் பண்ணை = வயல்

நஞ்சுபொழி துளையெயிற் றரவின்வாய் மண்டுக(ம்)
நலிவதென நடலையுறவோ
ஞாலத்து மன்பதை நகைத்திடி லுனக்கிழிவு
நம்புமெற் கேதுமுகில்கள்
துஞ்சுபொழில் சூழ்ந்துவள வைகைநீர் பாய்ந்துவிளை
சொற்கதிர்ப் பண்ணைசுலவுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 46

கட்டுண்ட பூங்குழற் கதிருண்ட பிறைநுதற்
கவினுண்ட கமலவதனக்
காவிமல ருண்டகட் கண்டுண்ட பணிமொழிக்
கடலமுத முண்டகொங்கைப்
பட்டுண்ட சிற்றிடைப் பரலுண்ட நூபுரப்
பஞ்சுண்ட செஞ்சீறடிப்
பாசுண்ட தோகையஞ் சாயலார் பாங்குண்ட
பரவச மொழித்தருளுவாய்
பிட்டுண்டு மண்சுமந் தடியுண்ட திருமேனி
பிறிதுண் டெனுதவண்ணம்
பேருலகி லுண்டாய சீவர்க்கெ லாம்பட்ட
பெருமையள வோகுறுமுனி
தொட்டுண்ட வாரிதியி னீருண்ட மேகங்கள்
சுலவுண்ட பொழிலுலாவுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 47

---

47. காவி = கருங்குவளை வாரிதி = கடல் சுலவுண்ட = சூழ்ந்த

மண்ணுலக(ம்) முதலாக முதண்ட ருலகு(ம்)மேல்
வந்தபகி ரண்டமுழுதும்
மாயைதரு காரியந் தோற்றமாத் திரமென்று
வாய்த்தகுரு நூலாற்றெளிந்
தெண்ணரிய ஞானம துதித்திடிற் சஞ்சிதம
தெட்டுணையு மின்றியழியும்
எய்துமா காமியம் பற்ருது ப்ராரத்த
மிங்கனுப வித்தொழியுமென்
றண்ணரிய வேதங்க ளாயிர முகங்களா
லறையும்வழி செல்லவஞ்சி
யம்பர மளாவிய கடம்படி முளைத்தநின
தருள்வேண்டி வந்துநின்றேன்
சுண்ணமது திற்றுமணி மாளிகைகள் பூதியணி
தொண்டர்தம துருவுகாட்டுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 48

மந்தரக் குன்றனைய நிதியைப் படைத்துமென்
மன்பதை மகிழ்ந்துபுகழ
வாக்குவெகு சாதுரிய மாகவச னித்துமென்
வரையிலா நூல்பயின்றென்
அந்தரக் கங்கைபுனை யெந்தைநின தருளின்றி
ஆவதொரு செயலுமுண்டோ
ஆசையறு மோபந்த பாசமறு மோவிரைந்
தடியேனை ரட்சைபுரிவாய்

---

48. அண்ணரிய = கிட்டரிய பூதி = திருநீறு.

49. மன்பதை = மக்கட்பரப்பு கந்தரத் தாரை = மேகம் பொழியும் மழை.

கந்தரத் தாரையென வண்டமிழ்க் கவிதைபொழி
கவிராச பண்டிதருடன்
காசியம் பதிசென்று தேசுமிகு நவரத்ன
கடகம் புனைந்தசெங்கைச்
சுந்தரச் சிந்தூர திலகநுதன் மீனாட்சி
சுடிகைமுடி சூடுமரசே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 49

மாற்றுவாய் பிறவியென மன்ருடி நின்னன்பர்
மனநெகிழ்ந் துருகியுருகி
மழைபொழிதல் போலவிழி நீர்பொழிந் தெம்பிரான்
மலரடி யடைந்துகொண்டார்
பாற்றுவாய் பவமென்ன மொழிகிலேன் வருமரண
பயமஞ்சி லேனுருகிலேன்
பனியினது துளியளவு நீர்சிந்து கின்றிலேன்
பரகதியும் வேண்டுகின்றேன்
தேற்றுவாய் பொருளிலக் கணமென்று புலவோர்கள்
தெண்டனிட் டேத்திநிற்கத்
தெள்ளிய தமிழ்க்கடல் கடைந்தெடுத் தன்பினை ந்
திணையென வகப்பொருட்கோர்
தோற்றுவாய் செய்துமு விருபதமு தச்சுவைச்
சூத்திரந் தந்தபுலவ
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 50

---

50. பாற்றுவாய் = விலக்குவாய், அல்லது கடத்துவிப்பாய்.
தோற்றுவாய் = ஆரம்பம்.

எற்கண்டு மலர்கின்ற தாமரை குவிந்தநள்
ளிரவினெல் வாரிவந்தே
யினியவமு தாக்கியே யெந்தைநினை யுண்பித்த
விளைசையம் பதிமாறனூர்
முற்கண்டு கைகுவித் தேத்துகோ கனகபதம்
முதுமறை முதற்பூம்பதம்
முந்தைநாட் சுந்தரர் மறுத்திடவும் வைத்தபதம்
முடிசூட வேட்டுநின்றேன்
கற்கண்டு சீனிதேன் முக்கனிச் சுவைவாய்ந்த
கல்லாட நூறகவலுங்
காதார வேற்றுமுடி நூறுதர முந்துளக்
கஞ்செய்த கவிதையறிஞ
சொற்கண்டு பொருளறிந் தருள்செய்ய வல்லநீ
தொண்டனேன் கவிகொள்வையோ
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 51

தக்ககனி யாங்கொவ்வை யதரத்தி ளுர்மகவு
தாய்தந்தை தமர்கண்மனைமுற்
சகலத்தை யுஞ்சடக் கெனவிடுத் துச்சென்ற
தாயுமா னவரைமுதலா
நெக்ககனி வாளர்பலர் நினையே நினைந்துருகி
நிமலநிலை பெற்றுவாழ
நீசனே னெட்டுணையும் விரதியது பூண்டிலேன்
நினைகிலேன் மனமுருகிலேன்

---

51. எல் = சூரியன் துளக்கஞ்செய்த = அசைத்த.

52. கொவ்வை = கோவை அதரம் = உதடு ஆசினி = பலா
வளை = சங்கு.

மிக்ககனி வாகியே விழிநீர் பெருக்கிலேன்
வீடுபெற லெந்தநாளோ
விரிபொழிற் றேமாவு மாசினியும் வாழைகளும்
மிகுதிபொழி மதுரம்வாய்ந்த
தொக்ககனி ரசமோடி வாவிநிறை வாகிவளை
தூக்கியெறி வைகைவிரவுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே 52

நீட்டுவா ரண நனந் தலைமுழங் கிடுமலையி
னிலவொளி பரப்புகற்றை
நித்திலத் துத்திப் பணுடவி மணிச்சுடிகை
நெளியர வணைக்கிடந்த
மோட்டுவா ரணம்வைத்த பூங்கரப் பொழியாத
முகின்முனங் கண்டறிகிலா
முதுமறைப் பாடக மொலிக்கநட மிடுசரண
முண்டகமென் முடியில்வருமோ
கோட்டுவா ரணமுரித் தேகாச மிட்டுவெங்
கோட்டரக் கதளுடுத்துக்
குருளைமான் கைக்கொண்டு முயலகனை யடியிட்ட
கொற்றவா கிஞ்சுகச்செஞ்

---

53. நீட்டு = நெடிதான வாரண நனந்தலை = கடல் மத்தியில் நித்திலத் துத்தி = முத்துப்போன்ற படப்பொறி மோட்டு வாரணம் = பெருமை பொருந்திய சங்கு (பாஞ்ச சன்னியம்) பொழியாத முகில் = விஷ்ணு (அறிகிலா சரணமுண்டகம் எனக்கூட்டுக) கோட்டுவாரணம் = கொம்பையுடைய யானை ஏகாசம் = உத்தரீயம் (போர்வை) கோள் தரக்கு அதள் = தீங்கிழைக்கும் புலியின் தோல் குருளை = கன்று

சூட்டுவா ரணமுயர்த் தரிதவண் சிகியூர்ந்த
சுதனேயரு ணெற்றிவிழியாய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 53

கனகாதி மூன்றினேயு மோடெனத் தாஷயனக்
காடென மதிக்கும்விரதி
காசினியி லெவராவ தொருவர்த மிடத்தினிற்
காணுமஃ தன்றிமற்றை
யனகாதி யற்றபல துறவிய ரிடத்தெலா
மத்தகைமை காண்பரிதெனு
அருமைமிகு சாந்தலிங் கேசர்திரு வாய்மலர்ந்
தருளிய மகாவிராகஞ்
சனகாதி ஞானியர்க டமதிட மிருந்ததித்
தமியனேன் போன்றவரெலாஞ்
சனனமர ணப்பிணிக் கென்செய்வே(ம்) நின்னதருள்
தரவேண்டும் வாசிட்டநூல்
சொனகாதி கதையில்வரு(ம்) மாயையினு(ம்)மாயையாற்
சுழலவென் னுன்முடியுமோ
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 54

---

கிஞ்சுகம் = சிவப்பு அல்லது முண்முருக்கம்பூ செஞ்சூட்டு வாரணம் = சிவந்த உச்சிச் சூட்டினே யுடைய கோழி அரித வண் சிகி = பச்சை வண்ணமான மயில்.

54. சனகாதி = பொன் பெண் பூமி விரதி = வைராக்கியம் அனகாதி = பாபம் முதலியன "இம்மையிற் சிறுமை" என்ற வைராக்கிய தீபச செய்யுளே நோக்குக சொனகாதி கதையில் = சொன்ன காதி கதையில் (னகரவொற்று தொகுத்தல்)

வரியங்க ராகவெழின் மடவார்கள் போகமுடன்
மக்களால் வருமின்பமும்
மாடமா ளிகைமேடை சூடிகை யுலாவலும்
வக்ராங்க மென்றூ விசேர்
பரியங்க சயனமும் பொருளினுன் மகிழ்தலும்
பரமார்த்த மல்லவென்றே
பரிவிரா கங்கொண்ட பட்டினத் தரசுபோற்
பற்றறுவ தெந்தநாளோ
திரியங்க மான வைங் கோசங்கள் கழிவுற்ற
சின்மயஞ் சாட்சிவடிவந்
தீராத வானந்த மமிர்தத்வம் வாங்மனு
தீதம்ப்ர பஞ்சரகிதந்
துரியங் கடந்தசிவ மெனமுந்தை வேதங்கள்
துதிபண்ணு கின்றபொருளே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 55

தட்டுக் கடங்காத மர்க்கடம தென்னவே
தாவிவிட யத்திலுழலுஞ்
சார்வரிய பொருளேனும் வேண்டிவேண் டித்தினஞ்
சங்கற்ப முற்றுமெலியுங்

---

55. வரியங்கராகம் = தேமல் படர்ந்த மெய்ப்பூச்சு அல்லது பூசும் பரிமளம் சூடிகை = மேன்மாடம் வக்கிராங்கம் = அன்னப்பட்சி தூவி = அன்னச்சிறகு பரியங்கம் = கட்டில் திரியங்கம் = மூன்று சரீரம் வாங்மனுதீதம் என்பதில் சம்ஸ்கிருத விதிப்படி ககரவொற்று மகரம்வர ஙகரவொற்றுயது.

56. மர்க்கடம் = குரங்கு.

கட்டுக் கடங்காத காரிகை தனைப்போன்று
கண்டபடி போயுலாவுங்
காசினியை யாட்சிபுரி மணிமகுட மன்னர் தங்
கனவாழ்வு வேட்டுநிற்கும்
மட்டுக் கடங்காத வானவர்த முலகத்தும்
வாழ்ந்துவர வாஞ்சைபுரியும்
மாதவ மியற்றவோ நிலைகொளா தையவிம்
மனமாயை மாற்றியருள்வாய்
சுட்டுக் கடங்காத பூரண மெனச்சுருதி
சொல்கின்ற பெரியபொருளே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 56

வஞ்சரித யம்போன்று திருசியம தேயுள்கி
வாக்குமாத் திரஞானியாய்
வாழ்பவனோர் மித்தியாச் சாரனென் றுயர்கீதை
வசனிப்ப தென்றனக்கோ
சஞ்சரித விந்திரிய மைந்தும்விட யங்களிற்
சாராமன் மனமொடுங்கச்
சமமாதி கைவந்து தவனுகி வாழநின்
றண்கருணை யமுதுபொழிவாய்
குஞ்சரி தனைக்குறவர் வள்ளியை மணந்தசிற்
குருபரனை வேழமுகனைக்
குழவிக ளெனக்கொண்ட வம்பிகையை மீனவர்
குலக்கொடியை யம்புராசி

---

57. வஞ்சரிதயம் = வஞ்சர் இதயம் எனப்பிரிக்க சஞ்சரித = செல்லப்பட்ட குஞ்சரி = தெய்வயானை மீனவர் = பாண்டியர் அம்புராசி = கடல் துஞ்சரி = துஞ்சு அரி எனப் பிரித்துக்கொள்க.

துஞ்சரி தனக்கிளைய சோதரியை வேட்டநற்
சோமசுந் தரமூர்த்தியே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 57

ஆர்ந்தபிர பஞ்சமுழு துங்கயிற் றரவெனவு
மாகாய நீலமெனவும்
அருணகிர ணத்துலவு நீரமென வுஞ்சுத்தி
யதிலொளிரும் வெள்ளியெனவுங்
கூர்ந்தபர நுட்பமதி யாளர்க்கு மித்தையாய்க்
கொஞ்சமு மிலாதகன்று
கூறரிய சச்சிதா னந்தமா யனுபவங்
கூடுமென வேதமொழிய
வோர்ந்துபர மேயுளது நாமரூ பஞ்சிறிது
முள்ளபடி யில்லையெனவே
யுற்றுவெகு திடமாக நோக்கமா லிற்றைவரை
யூழ்வினை வயத்தணுகிச்
சோர்ந்தபர ஞானமள வாகியலை யெற்குநீ
சுத்தபர ஞானமருள்வாய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 58

நரகத னிடைச்செலுத லமரருல கிற்புகுதல்
நடுநில மிதற்குவரலாய்
நலிவுறு விணக்கடலி னினதுகரு ணைப்புணையை
நடவியழி வற்றகரையாம்

---

58. அருணகிரணம் = சூரியனொளி சோர்ந்தபரஞான மளவாகி = சோர்ந்து அபரஞானமளவாகி எனப் பிரிக்க.
59. உரகதம் = வலிமையும் கோபமும் தவள மதகயம் = வெள்ளை யானை (ஐராவதம்) உவணை = தேவலோகம்

உரகத முடைத்தவள மதகய நடத்துமுய
 ருவணையர சுக்குமுலகை
யுதவுபிர மற்கு(ம்)நெடு முரகசய னற்குமின
 முணர்வறு பதத்தில்விடுவாய்
மரகத நிறத்தவளை மணிமுடி தரித்தரசு
 மனுமுறை நடத்தியவளை
வடவரை மடப்பிடியை வழுதியர் குலக்கொடியை
 மணவினை முடித்தவிறையே
துரகத மெனச்சிறிய நரிகளை யழைத்தொருவர்
 துயர்முழு தொழித்தபரனே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
 சொக்கலிங் கக்கடவுளே. 59

வன்புக்கு வன்புபுரி வாருண்டு புவிமீதின்
 மனமுடைந் தருகில்வந்தே
வாயார வாழ்த்தியும் வணங்கியு மடுத்தவரை
 மதியாது விடுவருளரோ
அன்புக் கிரங்கிடுங் கருணையங் கடலென்ன
 அறிஞர்களு மருமறைகளும்
ஐயநினை மொழிவதும் பொய்யாகு மோவுன்ற
 னருளுக்கும் வன்மையுண்டோ
என்புக்கு முன்னமுயிர் தந்தவெங் குருமணியி
 னிசைகேட்டு வழுதிவெப்பம்

---

இப்பாட்டின் முற்பாதியில் "கடலில் புணையை நடவி அழிவற்ற கரையாம் பதத்தில் விடுவாய்" என்று கூட்டுக. துரகதம் = குதிரை ஒருவர் = வாதவூரர்.

60. என்புக்கு = எலும்புக்கு வெங்குரு = சீர்காழி வழுதி = பாண்டியன்.

ஏகிடவு மெரிமடல் பசந்திடவு(ம்) நதியிலே
டெதிரேற வுஞ்செயரனே
துன்புக் கிரங்கியெயி னற்காத்த பழியஞ்சு
சுந்தர தயாமூர்த்தியே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 60

சாகரத் தேகுமுறு சீகரக் கணமெனச்
சந்ததமும் வந்துவந்து
தாக்குசுக துக்கங்கண் மோதிச் சுழற்றுமிச்
சகவாரி யமிழுமென்னை
நீகரத் தேந்தியரு ளோடத் திவர்த்திநின்
னிமலவான் கரையில்விடுவாய்
நிகமாதி கூறிடு(ம்) நியாயத்துண் மார்ச்சால
நியாயமொன் றுண்டல்லவோ
சேகரத் தம்புலி குலுங்கமந் தாகினி
திரைந்துநுரை பொங்கியெழவே
செஞ்சடை விரிந்திடக் கான்மாறி முனம்ராச
சேகரற் காடுமணியே
சூகரக் குருளைகட் கமுதுதவி மந்திரச்
சூழ்ச்சியர்க ளாக்கியவனே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 61

---

61. சகவாரி = பிரபஞ்சம் என்னும் கடல் நிகமாதி = வேத முதலியவை சேகரத்து = உச்சியின்கண்ணே மந்தாகினி = கங்கை சூகரக் குருளைகள் = பன்றிக் குட்டிகள் மந்திரச் சூழ்ச்சியர்கள் = அமைச்சர்க ளென்னும் ஆலோசனை யாளர்கள்.

அம்பரம் வளைந்தபுவி மன்பதை நடக்கைதனை
அம்மம்ம வேதுமொழிவேன்
ஆசைவய மாகியே பொருள்வேட் டலைந்திடுதல்
அனமுண்டு விழிதுயிலுதல்
பம்பர மெனச்சுழலு மனதுட னெழுந்தபின்
பழையபடி யோடியலைதல்
பரமார்த்த மொன்றுமிலை யுலகநடை வேண்டிலேன்
பாதமலர் வாழ்வருளுவாய்
எம்பரம நின்னரு ணடங்கண்டு பினருண்ப
தெளியேங்க ணியமமென்ற
விருமுனிவர் வாய்மலர வெள்ளியம் பொதுவேறி
யின்பநட மிட்டவரசே
தும்புருவு(ம்) நாரதரும் யாழ்தடவி யிசையுடன்
றுதிசெய்ய வருள்பொழிகுவோய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 62

கறவாத கற்பசுவும் வறளாந் தடாகமுங்
காயாத மரமுமெனவாழ்
கன்னெஞ்சர் பாற்சென்று குறையிரந் துழலாது
கருணைவடி வானவுன்னை
மறவாத சிந்தனமும் வாழ்த்தலும் வணங்குதலு(ம்)
மாறுது செய்துமகிழ்வாய்
மறைமுடி முழங்கிவரு வாசாம கோசர
மகானந்த மெய்தவருளாய்

---

62. அமபரம் = கடல் மன்பதை = மக்கட்பரப்பு இருமுனிவர் = பதஞ்சலி வியாக்கிரபாதர்.

63. வறளாந் தடாகம் = நீரின்றி வறண்ட குளம் (இடையிலுள்ள "ஆம்" சாரியை; புல்லாங்குழல் பூட்டாங்கயிறு மண்ணுங்

பறவாத வண்டுகல கலவென வலம்புகைப்
பரைதிமிலர் மகளாய்வரப்
பரவையிடை வலைவீசி மகரம் பிடித்துமேம்
படுமண முடித்தபரனே
துறவாத துறவராஞ் செனகாதி யரசரொடு
சுகராதி முனிவரறியுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 63

அருமைமிகு மெழில்“உடம் பாரழியி லுயிராரு
மழிவர்”என மூலர்சொன்னார்
“ஆக்கையுங் குருவாய தரச”வென யதுவிறைக்
கவதூத ரும்புகன்றார்
பெருமைமிகு ஞானநிலை பெறுமளவி(வ்) வுடலமும்
பேணவேண் டுவதாதலாற்
பிழைபுரி நோய்கள்பல சாரா திருந்தருட்
பேறெய்த வுதவிபுரிவாய்
கருமைமிகு நீர்பொங்கி நகரழிப் பான்வரக்
கௌரியன் கனவினிற்பேய்க்
காலமது தாழ்த்தலென் றுயிலெழுதி விடுதிவேல்
கடல்சுவற வென்றபரனே

---

கட்டி என்பவைகளிற் போல.) வாசாமகோசர = வாக்குக் கெட்டாத பறவாத வண்டு = சங்கவளையல் பரை = உமாதேவி.

64. அவதூதர் = தத்தாத்திரேயர் கருமைமிகுநீர் = கடல் கௌரியன் = பாண்டியன் (உக்கிர குமாரன்) துருமம் = மரம் இலஞ்சி = பொய்கை சொற்கதிர்செறு = நெற்கதிர் விளைகின்ற வயல்.

துருமமிகு சோலைமுக் கனிரச மிலஞ்சியிற்
சொற்கதிர்ச் செறுவினிற்பாய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 64

காக்குமா தவனயன் கற்பவுல காதிபன்
காண்டரிய நினதுவடிவைக்
கட்புனல் பொழிந்துநின் றனவரத முள்கியே
கரையுமன வன்பர்கட்கே
போக்குமா மாயைவன் கட்டினை யவிழ்த்தழிவில்
புத்தமிர்த வழ்வருளுவாய்
புவனியுள மீதறிகி லேமெம தவித்தையற்
புதமகிமை யென்னேயெனே
தேக்குமா கருணைப் பரஞ்சோதி மாமுனிவர்
சேக்கிழார் செய்யுளெனவே
தித்திக்கு முக்கனிப் பொங்கர்பொழி சுவைரசஞ்
சேலுலாங் காலினூடித்
தூக்குமா தங்கத் துதிக்கைமறை வாகவிளை
சொற்குலைக் கழனிபாயுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 65

நெட்டினப் பச்சோலை முப்புடைக் காய்த்தெங்கு(ம்)
நிறைமுட் கனிப்பலாவு(ம்)
நிழன்மாவும் வளர்காவு ளொருபுடைக் காஞ்சிரமு(ம்)
நின்றுவளர் கின்றதேபோற்

---

65. சேலுலாங்கால் = கெண்டை மீன்கள் உலாவுகின்ற வாய்க்கால் மாதங்கத் துதிக்கை = யானைத் துதிக்கை.

66. நெட்டினப் பச்சோலை = நெடிதாயும் இனமாயுமுள்ள பசிய ஓலைகள் முப்புடை = மூன்று பக்கமுடைய.

பட்டினத் துறவரசு முதலான ஞானியர்கள்
பண்டவ தரித்தபாரிற்
பத்திமை விராகாதி சற்றெனினு மில்லாத
பண்பினே னும்பிறந்தேன்
விட்டினத் தைத்துறந் தவரையுங் கூத்தாட்டு
வித்துவரு கொடியமாயை
வினையினேன் போன்றவரை யேதுதான் செய்யாது
விமலவுனை யுள்கியுள்கித்
தொட்டனைத் தூறிடு மணற்கேணி போற்கணீர்
சொரியவைத் தருள்பொழிகுவாய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 66

வட்டமங் கலவாடி யுட்டெரியும் வதனத்தில்
வண்டிலக மிடநினைப்போர்
வளர்கந்த ரத்தினுள வுண்மைவத னத்தினிடை
வைத்ததை யமைத்துவிடல்போல்
அட்டமங் கலமூர்த்தி யுனதருளு(ம்) நன்மைகளும்
அடியனேன் பெறவேண்டிலோ
அவைகணின் பாங்கருள வென்றுநான் பாவிக்கில்
அவ்வளவும் வந்தமையுமாற்
பட்டமங் கலநகரி லட்டமா சித்திவகை
பாவையர்க ளறுவருக்கும்
பங்கயத் திருவாய் மலர்ந்தருளு மையனே
பற்றார்கண் மூன்றுபுரமுஞ்

67. வட்டமங்கல ஆடி = வட்டவடிவாயும் மங்கலப் பொருளாயு முள்ள கண்ணாடி வதனத்தில் = முகத்தில் கந்தரத்தினுள = கழுத்தின் மேலுள்ள தூபிதம் = சுடல்.

சுட்டமங் கலநுதற் கண்கொண்டு மதனனைத்
தூபிதஞ் செய்தபரனே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 67

முனிவர்களும் மன்னவரு(ம்) முன்னுவன பொன்னினுன்
முடியுமென வாதவூரர்
மொழிதிருச் சிற்றம்ப லக்கோவை நூல்புகலு(ம்)
முறைமைக் கிணங்கவிந்நாட்
கனிவருந லன்புமுதிர் வாகிநின் றிருவடிக்
கமலங்கள் சாருமளவுங்
கவலா திருந்திடப் பிறரையெதிர் பாராத
கனகமீந் தருள்பொழிகுவாய்
குனிவருநி னடிதொழுத தருமியொடு பாணர்மேற்
குளிர்கருணை மழைபொழிந்து
"கொங்குதேர் வாழ்க்கை"மதி மலிபுரிசை" யெழுதிநல்
குரவினை யொழித்தியலையோ
துனிவருக ணீர்சோர வழுசைவ கௌரிமுன்
ரேன்றுருவ முன்றுகொண்டோய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 68

கல்வியொடு செல்வமுங் கதியருளு(ம்) ஞானமுங்
கைவரற் கிச்சைபுரியுங்
கனியுமுள வன்பர்கட் கவைநல்க வேண்டிலோ
கலைவாணி முதன்மூவரை

---

68. "முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னுல்" என்னுந் திருக்கோவையார்ச் செய்யுளைப் பார்க்க நல்குரவு = வறுமை துனி = துன்பம்.

69. கலைவாணிமுதல் மூவர் = சரஸ்வதி இலட்சுமி ருத்திராணி

4

நல்விழிக ளாக்கொண்ட நகராச குலமங்கை
நம்பநின் பங்கினுள்ளாள்
நன்குதிரு வாய்மலர்ந் தருள்வையே னல்கிடுவள்
நட்டம துனக்கில்லைகாண்
பல்விதம தானபொருள் வேட்டமூஉ(ம்) மக்கடம்
பட்ச(ம்)நிறை வேற்றவெனிலிப்
பாரினுள தந்தையர்கள் பாரிய ரிடத்தினிற்
பகர்வது பழக்கமலவோ
சொல்விதம தறியாது துதிபாடு மெற்குநீ
துணைபுரிதன் மிகவு(ம்)நன்ருந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 69

மறைவந்த பொருளெலாம் வான்மாரி பொழிவதென
வாரிப் பொழிந்தகருணை
வள்ளல்தத் துவராயர் குருசொரு பானந்த
மாதவ ரிடத்துவைத்த
நிறைவந்த பேரார்வ மெந்தவித மந்தவித(ம்)
நிற்பினன் ரேமுத்தியா(ம்)
நீசனே னிமலசற் குருபிரான் வடிவையொரு
நிமிடமு(ம்) நினைப்பதரிதாங்
கறைவந்த கண்டமும் பிறைவந்த வேணியுங்
கண்மூன்று வந்தமுகமுங்
கனல்வந்த மழுசூல மான்வந்த கைகளுங்
கருதுவார் வினைகளைகுவோய்

---

(திருவிளையாடலில் திருமகள் வலக்கண் வாக்கின் சேயிழை யிடக்கண் என்ற செய்யுளை நோக்குக.)

70. பேரார்வம் = பேரன்பான குருபக்தி.

துறைவந்த வைகையலை வீசுமணி கொண்டுசிறு
சுந்தரிகள் சிற்றில்புரியுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 70

எண்ணுவன யாவையு(ம்)நின் மந்த்ரசெப மாகவு
மியம்புவன தோத்திரமுமா
யிருகர மியற்றுசெயல் கும்பிடுத லாகவு
மிரண்டுகா னடைவலமுமாய்ப்
பண்ணுவன முற்றுமே நினதுபணி யாகவே
பாவித்து னருள்பொழிகுவாய்
பாரமுறு கருமமே வடிவான வுலகினிற்
பற்றறுத லெந்தவிதமோ
கண்ணுவர் கருக்கர்முத லானமுனி வோரெலாங்
கான்மலர் வணங்கியடியேங்
காணமறை யின்பொரு ளுணர்த்துகென வேண்டிடக்
கனிவொடு மொழிந்தகுருவே
துண்ணென முழங்கிமகி டங்களோ டிக்கயல்கள்
துள்ளமடு வீழ்ந்துழக்குந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 71

கன்னியம் பூந்துழாய் மாயவன் வராகமாய்க்
காசினி யகழ்ந்துதுருவக்
கந்தனிற் பிறவாத மலரவனெ ரெகினமாய்க்
ககனகூ டந்துழாவ

---

71. துண்ணென = பொருக்கென

72. காசினி = பூமி கந்தனிற் பிறவாத = நீரில் பிறவாத (கம் = நீர்) எகினம் = அன்னம் துன்னியம் = துன்னு

முன்னியங் கிருவர்களு மடிமுடிக ளறியாத
முன்னைப் பழம்பொருளுனே
முற்றுபரி பாகமொரு சற்றுமில் லேன்காண
முயல்வது வியப்பதன்றோ
வன்னியுங் கூபமுஞ் சிவலிங்க மும்பண்டு
வரவழைத் தொருமாதுதன்
மாருத கற்புநிலை மன்பதை தெளிந்துகொள
மண்டல முணர்த்துமரனே
துன்னியங் குழல்வீணை யாழிசையு(ம்) நால்வர் தந்
துதிகளு(ம்) முழங்குமறுகார்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 72

பைஞ்சுடர்ப் பூண்பட்டு பால்பூக்க ளிலதெனிற்
பண்பார் குடங்கைநீரும்
பச்சிலையு மிடுவார்க்கு னுளமகிழ் ந் தழியாத
பரகதி யளிக்குமுன்பே
மஞ்சுடற் கோபதியி னிமையாத குஞ்சரமு(ம்)
மறையவன் மலர்ப்பீடமு(ம்)
மணிவண்ணன் மாசுணச் சீரணையு மருள்வைநின்
மலரடியை மாந்தர்நினையார்
செஞ்சுடர்க் கர்ப்பூர தீபத் தவிந்தகண்
டெளிவுபெற நீலகண்ட

---

இயம் = நெருங்கிய வாத்தியம் நால்வர் = சைவசமய குரவர் நால்வர்.

73. குடங்கை = உள்ளங்கை மஞ்சுடல் = மேகமேனி கோபதி = இந்திரன் இமையாத குஞ்சரம் = ஐராவதம். இச்செய்யுள் முற்பகுதியின் பொருள், முக்கியப்பிரயோஜனமாகிய பிறவாதமுத்தியை யளிக்குமுன்பே அவாந்தரப்

தீட்சிதர்க் கருள்செய்த செல்விமீ னுட்சியாந்
தேவிக்கு வாய்த்தமணியே
துஞ்சுடற் பற்றுவிட் டருள்வேண்டு(ம்) மேதக்க
தொண்டர்பவ(ம்) நீக்கியாளுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே 73

பருதிவரு கீழ்க்கடலி லிட்டகழி மேற்கடற்
படுநுகத் துளைபுகுதல்போற்
பலகோடி பிறவியிடை மனுடவடி வாகியிப்
பாரினிடை வந்துதித்தும்
எருதிவரு மெந்தைநின் றிருவடி நினைந்துருகி
யேழ்பிறவி வாரிதாண்டி
யெங்கெழிலென் ஞாயிறென் றிவ்வுலகில் வாழாம
லிறுமாந்து திரிவதென்னே
கருதிவரு மோரன்பர் வாக்கைநிறை வேற்றிடக்
காதிலணி தோடெறிந்து

---

பிரயோஜனமாகிய இந்திரபதவி பிரமபதவி விஷ்ணுபதவி களையு மளித்தருள்வாய் என்பதாம். துஞ்சுடல் = பிராரப்த முடிவில் நசித்துவிடும் உடம்பு. இச்செய்யுள் பிற்பாதியின் விஷயம், திருவிரிஞ்சிபுரம்—அடையப்பலம் அறிவுக்கடல் மகான் ஸ்ரீ அப்பையதீட்சிதர் அவர்கள் தம்பி பேரனும், மதுரையரசர் திருமலைநாயக்கர் மந்திரியுமான ஸ்ரீ நீலகண்ட தீட்சிதர், மதுரை ஸ்ரீ மீனுட்சி பேரில் "ஆனந்த சாகர ஸ்தவம்" என்னும் துதிநூல் பாடி, கர்ப்பூரதீபத்தால் வெந்த கண்கள் மீண்டு மலர்ந்து தெளிவுபெறப் பார்வை பெற்ற அதிசயங் குறிப்பிட்டதாம். இம்மகான் "சிவலீலார்ணவம்" முதலிய பல நூல்கள் செய்திருக்கிருர்கள்.

கங்குல்படு மமையன்று விடியும்வரை வட்டமதி
காண்பித்த வபிராமியைச்
சுருதிவரு முதல்வியைப் பரமகலி யாணியைத்
துணைவியென வேற்றவரசே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 74

தன்றுதிக ளாமுக பஞ்சசதி யானந்த
சாகரஸ் தவமுதலவுஞ்
சக்திமகி மாவாதி யும்பலர்கள் செய்யவுஞ்
சௌந்தரிய லகரிமுதலா
அன்றுதிரு வாய்மலர ஆதிகுரு சங்கரர்க்
கருள்செய்த ஞானம்பிகை
ஐயநின் பாங்கரி லிருக்கவு மெனக்குநீ
யருள்வழங் காததென்னே
சென்றுதிசை யிருநான்கு முடல்வளைத் தேவந்து
சீர்நகரி னெல்லைகாட்டித்
திருவால வாயென்ற பெயர்தழைத் தோங்கிடச்
செங்கையங் கதம்விடுத்தோய்
துன்றுதின மணிகிரண மொன்றுநுழை யாதகுளிர்
சோலைமது மாரிபொழியுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 75

---

74. பருதி = சூரியன் நுகம் = நுகத்தடி இச்செய்யுளின் பிற்பாதியில் திருக்கடவூர் அபிராம பட்டர் சரித்திரம் வந்துள்ளது; அபிராமியந்தாதி பாடியவர். அமை = அமாவாசை வட்டமதி = பௌர்ணமிச் சந்திரன்.

75. அங்கதம் = பாம்பு தினமணி = சூரியன்.

யாவுங் கடந்தபர ஞானியர்க ளிவ்வுலகில்
யாதுவரி னுங்கலங்கார்
யமபயம தென்பதே சிறிதுமறி யார்பிறவி
யாதனையை யேதுமறியார்
தாவுங் குரங்கெனச் சுழலுமன வலைவினைத்
தகையவறி யேமிவகிலந்
தனினித்த(ம்) நித்தமுஞ் செத்துப் பிழைத்துவரு
தன்மையி லயர்ந்துநின்றேம்
ஏவுங் கருங்கொண்ட லேழும் பொழிந்தபொழு
திளமதி முடித்தசடைசூழ்
ஈரிரு கரும்புயல் விடுத்துநான் மாடமா
யேந்தநகர் காத்தவரசே
தூவுங் குறுந்திவலை மகரந்த(ம்) மிஞிறுணுந்
துணர்விரி கடம்பவனமாந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 76

ஓவாது சீகர முழங்குகுளிர் கங்கைபா
லொளிர்சீத வெண்டிங்களால்
உற்றபனி நீக்கவொரு நெற்றிவிழி யுங்கையி
லொளிமழுவு முடையையெனினும்
மேவாத ரம்பெருகு நினதன்ப ருனதுதிரு
மேனிக்கு மஞ்சனஞ்செய்
மிக்கநளிர் நீக்கவோ ரக்கினியும் வேண்டுமால்
வீறுமுத் தாபமென்னுந்

---

**76.** யாதனை = துன்பம் துணர் = பூங்கொத்து.

**77.** ஓவாது = ஒழியாது (ஒழிதலின் பெயர் ஓவல்) சீகரம் = அலை தாவானலம் = காட்டுத்தீ.

தாவான லஞ்சுடரு மென்மனு டவியினிற்
றங்கியது தீர்த்துவிடுவாய்
தகுதிபெறு திருநாம மாயிர முரைத்துநற்
றண்ணறும் பூக்களள்ளித்
தூவாது தோத்திரம் புரியாது வாணுள்
தொலைப்பவர்க் கருளுமுண்டோ
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 77

புனிதபர வுனதிடந் திரிபதகை யுண்டுகமழ்
பூங்கொன்றை மலருமுண்டு
புத்தமிர்த மதியுண்டு தனுவென வெடுத்தசெம்
பொன்மகா மேருவுண்டு
தனதனிரு நிதியுண்டு சதமகற் கருளைந்து
தருவுண்டு தேனுவுண்டு
சங்கற்ப முற்றவை யளிக்கவல தானசிந்
தாமணிச் செல்வமுண்டு
நினதிட மிலாதபொரு ளெதுவுள்ள ததையுதவி
நின்னைமகிழ் விக்கவல்லேன்
நிதநிதமு மெம்பிரான் றிருவருளை வேண்டுமொரு
நிலைதந்தென் மனதுகவர்வாய்
துனிதர வருந்துகுண் டோதரற் கனமீந்து
துய்த்தபினர் வைகைதந்த
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 78

---

78. திரிபதகை = சங்கை தனு = வில் தனதன் = குபேரன்
சதமகன் = இந்திரன் தேனு = பசு (காமதேனு)

இந்தப்ர பஞ்சமெனு மிருளடவி சார்ந்துநா
னென்றவொரு வேடன்வசமா
யின்னலை யடைந்திரு வினைக்கொடி பிணிக்கமகிழ்
விடர்வழி யுழன்றுமேலும்
பந்தப்ர மாதத் தழுத்திவிடு மாசையாம்
பனிவாடை வந்துவீசப்
படபடென மெய்விதிர்த் தைந்துபுல மிருகங்கள்
பயகர்ச்ச னம்புரியவே
யிந்தப்ர தேசம்விட் டெந்தவிதம் வெளியேறி
யினிநாம் பிழைப்பதென்றே
யிருவிழியு(ம்) நீர்சோர வுனதருளை வேண்டியே
யிதயங் கலங்குமெளியேன்
சொந்தப்ர தேசமாங் கதிசேர மெய்ஞ்ஞான
சூரிய னுதிக்கவருளாய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே 79

தவசதனை முன்செய்த பயனாக மானுடத்
தனுவெனுந் தோணிபெற்றுஞ்
சற்குருவி னுபதேச மாலுமியும் வாய்த்துமிறை
தனதருட் காற்றும்வீசப்

---

79. இன்னல் = துன்பம் மகிழ்வு இடர் = இன்ப துன்பம் கர்ச்சனம் = சிங்கம் புலி யானை முதலியவைகள் சப்தமிடல். இச்செய்யுள், ஸ்ரீ தாயுமான சுவாமிகளின் "இப்பிறவி யென்னுமொ ரிருட்கட லில் மூழ்கி" என்னுஞ் செய்யுள் போன்ற நிரூபகாலங்காரம்.

80. தவசு = தபஸ் என்னும் வடமொழித் திரிபு பவசலதி = பிறவிக்கடல் பாகவதம் = இங்கே செவ்வைச் சூடுவார்

பவசலதி நீக்கநினை யாதவன் றற்கொலைசெய்
        பாவியா வானென்னவே
பாகவத(ம்) மொழிதலா லிந் த நா ளடியனேன்
        பரகதியை வேண்டி நின்றேன்
அவசமகிழ் வாகியே முன்னந் தடாதகைதன்
        அன்னைவேண் டுதலைமொழிய
அலைபொங்கு மெழுகட லழைத்தது மலாதுமற்
        றந்தர மிருந்தமலயத்
துவசனை யழைத்துமனை காஞ்சனையொ டாடிடத்
        துணைசெய்த கருணையரசே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
        சொக்கலிங் கக்கடவுளே 80

அஞ்சனக் குன்றநிகர் குஞ்சரஞ் சமணர்விட
        அடல்கெட முருக்கிவிட்டாய்
அங்கத(ம்) நெடுஞ்சக்ர வாளமென வவரேவ
        அதனையு மழித்துவிட்டாய்
வஞ்சனைச் செய்கைமா யப்பசுவை யேவிவிட
        மாநந்தி விட்டழித்தாய்
மறைவழியை யுனதுருவை மதியாத வன்னவரை
        வன்கழுவி லேற்றுவித்தாய்

---

பாகவதம்; "மானுட வாக்கை யென்னும் மருவருந் தோணி பெற்றும்" என்னும் செய்யுளை நோக்குக, அவசம்= பரவசம்.

**81.** அஞ்சனம்=கறுப்பு முருக்கிவிட்டாய்=கொன்றுவிட்டாய் அங்கதம்=பாம்பு துஞ்சனப் பறவை=துயிலும் அன்னப் பறவை. இச்செய்யுளின் **11, 12**-ஆம் வரிகளுக்கு "பேதைமையை மிகவுங் கற்றுத் தகாத வழியில் நடப்ப வரை விதிப்படி தண்டித்துத் திருத்துதல் நன்றே" என்ற

வெஞ்சினத் துட்டகுண மாதிகைக் கொண்டவர்கண்
மேன்மையினை யடைவதுண்டோ
வேற்றுமை மிகப்படித் தல்வழி நடப்பவரை
விதிவழி திருத்தனன்றே
துஞ்சனப் பறவையின் றெகுதிகண் விழித்திடச்
சுடர்மணிகள் வாவியெறியுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 81

எல்லாமும் வல்லவொரு சித்தர்வடி வாகியே
யெங்கெங்கு(ம்) நீயுலாவி
யெத்துணைய வற்புத(ம்) நிகழ்த்திநில மன்பதைக்
கிதயமகிழ் வினிதளித்தாய்
கல்லானை மீனவன் கண்காண வீர்ஞ்சுவைக்
கழையினை யருந்தவைத்தாய்
கருதும்ப்ர புத்வசா மர்த்திய குண த்ரயங்
கைவச மிருக்குமியல்போ
நில்லாம லொருநொடியின் மூவுலகு மோடிவர
நினையுமன தென்வசமதாய்
நிற்கவொரு தந்திரம் பண்ணிநின் றிருவருளை
நேராக வறியவருளாய்

---

பொருளையும்; "வேற்றுமைப் புணர்ச்சியைப் படித்திருந்து அல்வழிப் புணர்ச்சியாக மயங்கிப் பொருள்கொள்பவரை விதிப்படி திருத்துதல் நன்றுதான்" என்ற தொனிப் பொருளையுங் காண்க.

82. பிரபுத்வ சாமர்த்திய குணத்ரயம் = ஈஸ்வரனுக்குள்ள சர்வக்ஞத்துவாதி ஆறு குணங்களே யல்லாமல், கர்த்துருத்வம் (ஒன்றைச் செய்யுந்தன்மை) அகர்த்துருத்வம்

சொல்லான சுமனசங் கொண்டுபுனே பாமாலே
சூட்டுவார்க் கின்பமுதவுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 82

உறையிட்ட பொருளெனப் பஞ்சவித கோசங்க
ளூட்பட்ட பொருளறிகவென்
றுபநிடத முயர்கீதை பஞ்சதசி வாசிட்ட
மோதுவ தறிந்திருந்துங்
கறையிட்ட வஞ்ஞான வலிமையா லிற்றைவரை
கண்டறிய முடியாமலே
கவல்கின்ற சிறியனேற் கந்தவனு பூதிநிலே
கைவரக் கருணை புரிவாய்
சிறையிட்ட முகிலெலா மீளவிட் டிந்த்ரன்முடி
சிதறவளே விட்டெறிந்து
திரணிதி யெடுத்துவர வடதிசையின் மேருவைச்
செண்டா லடித்துவைகைத்
துறையிட்ட தமிழகத் தரசுபுரி வழுதியைச்
சுதனெனப் பெற்றவரசே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 83

---

(ஒன்றைச் செய்யாதிருக்குந்தன்மை) அந்நியதா கர்த்துருத்வம் (வேறுவிதமாகச் செய்யுந்தன்மை) ஆகிய இம் மூன்று குணங்களாம். சுமனசம் = புஷ்பம்.

83. 1, 2 வரிகள் "குகைக்குள் இருக்கும் ஆத்மாவை யறிய வேண்டும்" என்ற சுருதிப்பொருள்.

உரமருவு பானுமதி யிருநாடி வழியோடி
யுழல்வாயு வொருமையுறவே
யோரிதழ்த் தாமரையை மேனிறீஇப் பிரணவம
துள்கிமிசை வாயிலென்னும்
பரமரக சியமான சுழிமுனே புகுத்தியே
பரவச மனத்திலுறவே
பாராத வொளிகளுங் கேளாத தொனிகளும்
பார்த்தென்று கேட்டுமகிழ்வேன்
பிரமர முரன்றுசுவை மகரந்த முண்டுவரி
பெரிதிசைக் குங்குருந்தின்
பீடுறு நிழற்றங்கு குருவாகி வாதவூர்ப்
பெருமானை யாண்டபொருளே
சுரமரபு பிறழாது யாழ்தடவி யிருமுனிவர்
சுருதிவரி செய்யமகிழ்வோய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம் வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 84

மஞ்சார் கருங்கூந்தன் மதிவதன மானனர்
மாமோக வெங்காமமோ
வனமுட் குளிப்பினுங் குன்றேறி மறையினும்
வழுவாது சுடுமென்னவே
யெஞ்சாது நீதிமுழு தும்புகலு(ம்) நாலடி
யியம்புதலை யறிவரேனும்

---

84. ஓரிதழ்த் தாமரை = இதன் பொருளைக் குருமுகமா யறிக. பிரமரம் = வண்டு மகரந்தம் = பூந்தேன்.

85. மஞ்சு = மேகம் மதிவதனம் = சந்திரன் போன்ற முகம் வனம் = நீர் நாலடி = நாலடியார் என்னும் நூல் அபவர்க்கம் = முத்தி தாரகம் = கடத்துவிப்பது அல்லது கடைத்

எந்தைநின் றிருவருட் கயலாவ ரேலவரு
மிச்சைவச மாவரன்றே
அஞ்சாது மனமாயை தனையெதிர்த் தமராடி
யபவர்க்க முற்றபேறும்
ஐயநின் கருணைகொண் டன்றிவே றல்லவே
யடியேற்கு மதுதாரகந்
துஞ்சாது நள்ளிரவு சுமைவிற கிறக்கியே
தூயசா தாரிபாடுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 85

தத்தமது மனதுளவை நாற்பதாம் வயதினிற்
சாருமென வுலகர்சொல்வார்
தமியனேற் ககவையொரு மூவிருப தாகியுஞ்
சங்கற்ப சித்தியிலதாற்
சித்தமது பரிபாக மாகவிலை யோமுன்செய்
தீவினைகொ லோவலதுநின்
றெய்வீக மானவிளை யாடலோ விரைவிலுன்
றிருவருட் காளாக்குவாய்
முத்தமது நிகர்மூரல் வணிகமட வார்க்கன்று
மூரிவளை விற்றபெரியோய்
மூசுவண் டறைநிம்பம் அணிவழுதி மதலைக்கு
முடிசெய்ய மணியுதவுவோய்

---

தேற்றுவது துஞ்சாது = உறங்காமல் நள்ளிரவு = நடுராத்திரி.

86. தத்தமது = தந்தமது என்பது வலித்தல் பெற்றது. அகவை = வயது முத்தமது = முத்தம்; அது பகுதிப் பொருள் விகுதி. மூரல் = பல் மூரி = வலிமை. பெருமை

துத்தமது முதலவெழு கடல்சூழு முலகெலாந்
தோன்றவொரு பார்வைசெய்வோய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 86

புள்ளியுறு மம்பணம் விரிக்குமுர கந்தாங்கு
புவியரசர் வாழ்வைவேண்டேன்
புத்தமுத முண்டுநெடு நாளரசு புரிகின்ற
புருகூதன் வாழ்வும்வேண்டேன்
முள்ளியுறு தேன்போலு மவையெலா மற்பமென
மூதறிஞர் மொழிவரதனுன்
முதுமறை முழங்கு(ம்)நின் பூஞ்சரண வாழ்வென்னு(ம்)
முத்திதான் வேண்டுமரசே
யெள்ளியுறு குற்றஞ்சொல் கீரனைப் பூஞ்சுனை
யிழிந்திட நுதற்கணேக்கி
யிடர்கெடக் கரையேற்றி மலயமுனி யைக்கொண்
டிலக்கண முணர்த்துமிறையே
துள்ளியுறு விளையாடல் புரியு(ம்)மான் கன்றுந்த்ரி
சூலமுங் கொண்டகரனே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 87

---

நிம்பம் = வேம்பு (வேப்பம்பூ மாலை) துத்தம் = பால் மது = தேன் முதல = முதலா யுள்ளனவாகிய பார்வை = சிருஷ்டி பரியாலோசன ஈக்ஷணம். காலமுங் கன்மந்தானும் என்ற பிரமகீதைச் செய்யுளைக் காண்க.

87. அம்பணம் = அழகிய படம் உரகம் = பாம்பு (ஆதிசேடன்) முள்ளியுறு = முள்ளிச் செடியின் சிறிய பூவிலுள்ள மலயமுனி = அகத்தியர்.

பண்டுமுத லின்றுவரை பெற்றவரை யெண்ணிலோ
பழுவமுதிர் சருகையொக்கும்
பலபிறவி யின்றெகுதி வந்தவகை யெண்ணிலம்
பரமொளிரு முடுவையொக்கும்
உண்டுவள ரத்தாய ருட்டமுது கூட்டிலோ
வோங்குபாற் கடலையொக்கும்
ஒவ்வொரு பிறந்தையுறு மின்பதுன் பங்களோ
வுவரியுள மணலையொக்கும்
கண்டளவி டற்கரிய வினையெலா முடியவொரு
காலமு மிருக்குமலவோ
கருதுமக் காலமிக் காலமென வேகொண்டு
கருணையாற் கதியருளுவாய்
தொண்டுபுரி வரகுணற் கன்றுசிவ லோகமது
தோன்றவே காட்டியருளுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 88

கதியிலே விழைவின்றி மகளிர்நுதன் மதியிலே
கரியபூங் குழன்மீதிலே
காதுபொரு காவிமலர் விழியிலே தேனூறு
கஞ்ச(ம்)நிகர் செவ்வாயிலே

---

88. பழுவம் = ஆரணியம் உடு = நட்சத்திரம் பிறந்தை = பிறப்பு உவரி = கடல்.

89. நுதன்மதி = நெற்றியாகிய சந்திரன் காவி = கருங்குவளை பொதியிலே வருசந்த நகில பாரத்திலே = பொதியமலையிலே உண்டாகி வருகின்ற சந்தனமணிந்த பாரமான கொங்கையிலே நகிலம் = கொங்கை முத்தநிகர் நகையிலே = முத்துக்களைப்போன்ற பல்வரிசையிலே உடுபதி = சந்திரன்

பொதியிலே வருசந்த நகிலபா ரத்திலே
　　பூங்கா ந்த ணிகர்கையிலே
புத்தமிர்த வாக்கிலே முத்த(ம்)நிகர் நகையிலே
　　போ(ம்)மனதை மாற்றியுனது
நதியிலே யொளிருமுடு பதியிலே சடையிலே
　　நறியபூங் கொன்றைதனிலே
நகுமூன்று கண்ணிலே பரசுமான் கன்றிலே
　　நடனமிடு திருவடியிலே
துதியிலே மகிழடியர் குழுவிலே செலவருடி
　　சோமசுந் தரமூர்த்தியே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
　　சொக்கலிங் கக்கடவுளே. 89

புரிகின்ற பூசையொரு கோடிக்கு நிகரதாம்
　　புகழ்பாடி யேதுதித்தல்
புகலுமத் துதிகளுக் கொருகோடி நிகரதாம்
　　புனிதமந்த் ரஞ்செபித்தல்
விரிகின்ற மந்த்ரசெப மொருகோடி நிகரதாம்
　　விமலவுனை நினைதியானம்
மேதகு தியானத்தி னொருகோடி நிகரதாம்
　　விட்சேப மனமொடுங்கல்

---

செலவருடி = செல்லவருளுதி. இச்செய்யுள், ஸ்ரீ தாயுமான சுவாமிகளது "தெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே" என்ற செய்யுளைப்போன்ற இயைபுத்தொடை. சுதியிலே விழைவின்றி போம் மனதை மாற்றி செலவருடி என்று கூட்டுக.

90. இச்செய்யுளின் முற்பாதி:—

பூஜாகோடி சம:ஸ்தோத்ரம் ஸ்தோத்ரகோடி ஸமோ ஜப:
ஜப:கோடி ஸமோ த்யானம் த்யான கோடி ஸமோ லய:
என்னும் சுலோகத்தைக் கொண்டு செய்தது.

தெரிகின்ற விந்தவித மான்ருே ருரைத்தலாற்
சிறியனேன் மனதொடுக்கஞ்
சேர்ந்துபர மானந்த சாகர மழுந்தநின்
றிருவருள் புரிந்தருளுவாய்
சொரிகின்ற மதுமழைப் பொழில்பூத்த மலர்மணஞ்
சுற்றுமொரு காத(ம்)நாறுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 90

நமதுபொரு ணமதுமனே நமதுநில மென்றெண்ணி
நாளெலாம் வீணதாக
நமனுர் நெருங்குபொழு தெள்ளளவு தொடர்பின்றி
நானிலத் துள்ளமாந்தர்
தமதுடல முழுவதுங் கழிதல்கண் டுங்கழிதல்
சற்றுமே காண்கிலார்போற்
றரணியி லுலாவுவார் நினதருளே வேண்டிடார்
சகமாயை யென்னேயெனே
அமுதகிர ணம்பரவு குமுதநண் பனேமுடியி
லணிகின்ற கருணேவடிவே
யன்றுசிறு பாலனுக் கொருமாம ஞகிமீட்
டருநிதி யளித்தவரசே
சுமுதமல யத்துவச வழுதிபுரி மகவழற்
ருேன்றரிவை பாகமுடையாய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 91

பொழில் = சோலே.

91. குமுதநண்பன் = சந்திரன் சுமுத = நன்மகிழ்ச்சியுடைய
மக அழல் = புத்திர காமேஷ்டி அக்கினியில்

முந்துவரு கிருதயுக காலத் தியானமும்
மொழிதிரே தாயக்ஞமும்
முற்றிய துவாபரத் தர்ச்சனையு மாதுமிம்
மூன்றுந் தனித்தனியதாய்த்
தந்துதவு மெப்பயனை யொருமனித னடைவனத்
தகையபல னிக்கலியினிற்
சந்ததமு முனதுதிரு நாமசெப மதுகொண்டு
சாரலா மென்றிருக்க
எந்தவித மானவொர் முயற்சியு மிலாமலே
யிவ்வுலகில் வாழுமடியேன்
எந்தைநின தருளுக் குரித்தாகி வாழுநாள்
எந்தநா ளோவறிகிலேன்
துந்துபியை முதலான மங்கள விசைக்கருவி
தொந்தொமென வேமுழங்குந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 92

பூபார(ம்) நீக்கவசு தேவன்மக வாகிவரு
புனிதன்வாய் மலர்கீதையும்
புண்ணிய வியாசர்திரு வாய்மலர்ந் தருண்ஞான
போதசா ரீரகமதூஉந்
தாபான லந்தவிர்க் கும்பழமை யுபநிடத
தருமமறை யுஞ்சங்கரர்

---

92. இச்செய்யுளின் முற்பாதி:-

த்யாயன்க்ருதேயஜன்யஜ்ஞை:த்ரேதாயாம்த்வாபரேzர்ச்சயன்
யதாப்னோதி ததாப்னோதி கலௌ ஸங்கீர்த்ய கேஸவம்

என்னும் சுலோகத்தைக் கொண்டு செய்தது.

93. நீபாடவி = கடம்பவனம் நீகாரம் = பனி சோபானம் = படி (கிரமம்)

சாற்றுபா டியமெலா மோர்ந்தவைகள் சொல்லும்வழி
சாரவரி தென்றுகருதி
நீபாட விக்குள்வளர் முக்கணர சேகருணை
நிதியமே நினையடைந்தேன்
நின்னதருள் பாலிக்கி லென்னதறி யாமைரவி
நேர்சிதறு(ம்) நீகாரமாஞ்
சோபான மானசரி யாதிவழி செலுமன்பர்
சுகமுறற் கருள்பொழிகுவோய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 93

முத்திவடி வாய்நின்ற செனகர்சுகர் முதலான
முனிவரதி தீவிரநிலை
முற்றுவதெ னிற்சிறிய னேன்போன்ற வர்க்கரிது
முதல்வநின் னருள்வேட்கையாய்ப்
பத்திவடி வாய்நின்று சாதிக்க லாமெனிற்
பழையவினை வாசனையெலாம்
பரவைவரு திரையெனப் பலகோடி வந்திடிற்
பரமசுக மென்றடைகுவேன்
சத்திவடி வேற்சரச் சண்முகனை நுதல்விழித்
தந்தமரர் துயர்களைந்து
தவளவண நாற்கோட்ட குஞ்சர மிவர்ந்துவரு
சசிகொண்க னரசுதந்தோய்
துத்திவடி வம்பணமொ ராயிரமு டைப்பணிச்
சுமைஞால மீன்றமுதலே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 94

---

94. நாற்கோட்ட = நான்கு கொம்புகளுள்ள சசிகொண்கன் = இந்திரன் பணி = பாம்பு (ஆதிசேடன்)

மந்தைக்கு ணின்றுலவு மோராயி ரம்பசுவுண்
மழவிளங் கன்றுதாயின்
மலர்முக மறிந்தெய்தி மகிழ்வோங்க வால்தூக்கி
மடிமோந்து நிற்பதேபோல்
இந்தப்ர பஞ்சத்து ளெவ்வுலகி லெந்நாட்டு
ளெவ்விடத் தெந்தவடிவா
யிச்சீவ னெய்துகினு(ம்) முந்தைவினை வந்துசேர்ந்
தின்பதுன் பந்தருதலாற்
பந்தப்ர மாதங் களைந்துசிவ மாக்கவல
பரமபதி யுனதருளினுற்
பழையசஞ் சிதமாதி மூவினைகள் பற்றுத
பரமநிலை வேட்டுநின்றேன்
தொந்திக் கடோதரத் தந்திவத னப்ரணவ
சுதனையந் நாட்பயந்த
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 95

ஓயாத வுலகவிவ காரத் துழன்றுவரு
மூசன்மன முடையர்நட்பால்
ஒருநாளு மொருவேளை யொருநிமிட மேனுமே
யுபசாந்தம் வருவதில்லை

---

95. இச்செய்யுளின் முற்பாதி:—
யதா தேனு ஸஹஸ்ரேஷு வத்ஸோ விந்ததி மாதரம்
ததா பூர்வ க்ருதம் கர்ம கர்த்தாரம் அனுகச்சதி
என்னும் சுலோகத்தைக் கொண்டு செய்தது. நாலடியாரி லுள்ள "பல்லாவுள்" என்ற வெண்பாவையும் நோக்குக. கடோதரம் = குடம் போன்ற வயிறு.

96. சரசீருகம் = தாமரை தாரகம் = கடத்துவிப்பது, கடைத் தேற்றுவது.

மாயாத மாயைதனை மாய்த்தபர மானந்த
 மகிமைபெறு சீவன்முத்தர்
மாண்புமிகு தெரிசனத் துய்திபெற லாமென்னின்
 மகிழ்மூன்றி லொருவரறிதாஞ்
சாயாத முயல்வுகொண் டுனதுசர சீருகச்
 சரணமல ருள்கியுள்கித்
தண்ணருட் காளாத லன்றியொரு தாரகஞ்
 சார்கதிக் கிலையையனே
தோயாத தூயவந் தக்கரண மேதகைய
 துறவியர்க் கருள்செயரசே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
 சொக்கலிங் கக்கடவுளே. 96

பயிலுமுற் பலபிறவி வாதனை வயத்தனுய்ப்
 பரகதி விருப்பமின்றிப்
பவுதிகம தாம்பெரிய திருசியம தேயுள்கு
 பாவனை முதிர்ந்தவென்னை
வெயிலெறிக் குந்தரள மணிபடுங் கடனீரை
 மேகமுண் டுவர்கெடுத்து
மிக்கமது ரங்கலவ வேசெய்யு மாறுநீ
 வினைகடிந் தாண்டருளுவாய்
குயிலொலிப் பக்கலப மயினடிக் கும்பொழிற்
 குளிர்கரைத் திரைவைகைநீர்
கூடுசெறு வுழுகளமர் மேதிபுடை கழைமணிகள்
 கோகனக வாவியன்னந்

---

**97.** பவுதிகம் = பௌதிகம் = பூதகாரியம் கலபம் = தோகை செறு = வயல் மேதி = எருமை வரி **11–13,** கழைமணிகள் தெறிக்கும் எனக் கூட்டுக.

துயிலெழுப் பத்தெறிக் குஞ்செழியர் நாட்டுறு
துவா தசாந் தப்பதியெனுந்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 97

எந்தைநின தருளுக் குரித்தாகி யென்றென்றும்
எள்ளளவு துக்கமின்றி
யிரவுபக லற்றநிலே யென்றபெரு வாழ்வுபெற்
றெங்கெழிலென் ஞாயிறென்று
பந்தமற வாழாம லுடலே நான் நானென்று
பாவனைசெய் திற்றைவரையும்
பலனென்ன கண்டதர சேயுனது திருவருட்
பாக்கியம் பெற்றுய்வனே
வந்தனைசெய் பூவணக் கணிகைமன(ம்) மகிழரச
வாதமெனும் விஞ்சைபுரிவோய்

---

**98.** "எங்கெழிலென் ஞாயிறு" என்னும் இப்பிரயோகம் முன் **74**-ஆம் செய்யுளினும் வந்துள்ளது. இதன் கருத்து:— ஈஸ்வரானுக்கிரகம் பெற்றுக் கிருதகிருத்தியர்களாயிருக்கும் ஜீவன்முத்தர்களுடைய கவலேயின்றிய நிலேயைத் தெரிவிப்பதாம். ஆன்றோ ரிலக்கியங்களில் ஆங்காங்கே இப்பிரயோகங் காணப்படும்; உதாரணம்:— திருநாவுக்கரசு சுவாமிகளது " எங்கெழிலென்ஞாயி றெளியோமல்லோம்" (6—95—2) என்னும் திருவாக்கையும், வாதவூரடிகளது " எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோ ரெம்பாவாய்" என்னும் திருவாக்கையும், தத்துவராய சுவாமிகளது, "எந்தைகழல்சூடி னெங்கெழி லென்ஞாயி றென்றிருக்கல்லாங்கினீர்" என்னுந் திருவாக்கையும், தாயுமான சுவாமிகளது,

வழுதிபகை யாய்வந்த வளவனொரு வன்றன்னை
மடுவினிடை வீழ்த்திவிட்டோய்
சுந்தர மிகுந்ததிரு மெய்க்காட்டி யோரன்பர்
துயரொழித் தின்பருளுவோய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 98

வந்தர மடந்தையர்கள் வாஞ்சித்த போதுமவர்
மதிவதன(ம்) நோக்கிமகிழார்
மாகபதி சிந்தா மணிப்பொருளு மளகைநகர்
மா நிதி யிரண்டும்விழையார்
இந்துரவி மண்டலந் தெற்கினி லெழுந்துவட
லெய்துகினும் விம்மிதமுறார்
எம்பிரான் கருணைப்ர வாகத் தழுந்துமவ
ரின்பதிலை யென்னேயெனே
அந்தர சயந்தன மிவர்ந்துமுனி வோரெலாம்
அந்தமிகு காசிவிட்டே
யாலவாய் வந்துபொற் றாமரை படிந்தேறி
யர்ச்சனை புரிந்துசோம

---

"பொங்கியநின் றண்ணருளைப் புட்கலமாப் பெற்றவர்கட் கெங்கெழிலென் ஞாயி றியம்பாய் பராபரமே" என்னும் திருவாக்கையும் ஏனைய பெரியோர்கள் திருவாக்குகளையும் நோக்குக.

99. சயந்தனம் = தேர் இவர்ந்து = ஏறி முனிவோரெலாம் = காசி முத்திமண்டபத்தி லிருந்து அகஸ்திய மகாமுனிவரிடம் ஸ்ரீமத் ஹாலாஸ்ய மாஹாத்மியம் சிரவணம் பண்ணிய முனிவர்கள் எல்லாம் அந்தமிகு = அழகு மிகுந்த.

சுந்தர கருப்பூர சுந்தர கடம்பவன
சுந்தர வெனத்துதித்த
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 99

இருபது பிராயமுத லிதுவரையு முனதுபுகழ்
எனதிதய மூறியவெலாம்
இந்தவொரு சதகமாய் வந்தமைய விதனையான்
எந்தைதிரு முன்புமொழிகேன்
ஒருபது மலர்க்கரத் தெம்பிரா னின்னதருள்
உண்டென்னி லுய்திபெறுவேன்
உளதென்று நம்பினேன் உளதென்று நம்பினேன்
உன்கிருபை மழைபொழிகுவாய்
வருபத பதார்த்தங்க ளறிபுலமை தெளிவுபெற
வான்சங்க நாவலர்க்கு
மதியைவிட வாலிதா(ம்) மந்த்ரவலி யுடையதாம்
வண்பலகை தந்தபுலவ
துருபதன் மகட்கன்று திருவருள்செய் மாயவன்
சோதரியொர் பாகமுடையாய்
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
சொக்கலிங் கக்கடவுளே. 100

---

100. இதயம் ஊறிய எலாம் = காலாந்தரங்களில் பார்த்துவந்த நூல்களாலும் அறிஞர்கள் பழக்கங்களாலும் அந்தக் கரணத்தில் சம்ஸ்கார மயமாய் ஊறிவந்தவை யாவும் துருபதன் மகள் = திரௌபதி.

## வாழ்த்து

சிவரூப மாகநின் னடியார் செபித்துவரு
 திருவைந் தெழுத்துவாழி
தெண்ணிலவு மிகுதிபொழி வெண்ணிலவு போலவொளி
 திகழ்நீறு வாழிவாழி
தவரூப மாக்கவல வக்கமணி வாழிநின்
 சரணேத்து மன்பர்வாழி
தந்தியிரு நான்குதாங் கிந்திர விமானமாந்
 தளியு(ம்)நீ டுழிவாழி
பவரூப மானகட னின்றுகதி சேர்க்கவல
 பரசுதர வாழிவாழி
பாங்கருள பச்சைமர கதவல்லி யம்பிகை
 பரமகல் யாணிவாழி
சுவரூப மானபர சச்சிதா னந்தசிவ
 சோமசுந் தரமூர்த்தியே
துங்கமிகு முத்தமிழ்ச் சங்கம்வளர் மதுரைவாழ்
 சொக்கலிங் கக்கடவுளே. 101

---

**101.** அக்கமணி = ருத்ராட்சமணி தந்தி = யானை தளி = தேவர் கோயில்.

---

ஸ்ரீ சொக்கலிங்கக் கடவுள் தோத்திரச் சதகம்
முற்றிற்று.



உ

ஸ்ரீ மீனும்பிகை துணை.

திருவாலவாய் என்னும்

**மதுரையம்பதியின்கண்**

எழுந்தருளி விளங்கும்

# ஸ்ரீ மீனுட்சியம்மையார்

# தோத்திரப் பாமாலை.



காரைக்குடி,

கோவிலூர் மடம்

மாணவர்

**மகா. சோமசுந்தர சுவாமியவர்கள்**

பாடியது.



# இரண்டாம் பதிப்பின் முன்னுரை.

ஸ்ரீ மீனுட்சியம்மையார் தோத்திரப்பாமாலை என்னும் இந்நூல் துன்முகி-ஞூ ஆவணி-மீ 26-உ திங்கட்கிழமை (10—9—56) அன்று ஆரம்பித்து, திருவாரூர்—விஜயபுரம், கருணுநிதி அச்சகத்தில் முதற் பதிப்பாக அச்சிடப்பெற்று ஷை வருஷம் ஐப்பசிமீ வெளியிடப் பெற்றது. இப்போது ஸ்ரீ சொக்கலிங்கக்கடவுள் தோத்திரச் சதகம் முதற் பதிப்புடன் சேர்த்து (இரண்டாம் பதிப்பாக) வெளியிட்டிருக்கிறேன்.

முதற் பதிப்பாக அச்சிட்டு வெளியிடப் பொருளுதவி செய்த புண்ணியம், சீர்காழி பகவத் பக்திமான் பிரஹ்ம ஸ்ரீ **S. N. வெங்கட்டராம ஐயர்** அவர்களைச் சேர்ந்தது. ஆடிப் பாடி ஆனந்தமாகப் பஜனை பண்ணும் அந்த மகோன்னதமான புண்ணியசீலர் சௌமிய-ஞூ தை-மீ 26உ ஞாயிற்றுக்கிழமை அன்று தமது சரீரத்தை நீத்துத் திருவருளிற் கலந்தார்கள். இவ் விரண்டாம் பதிப்பை அவ் வந்தணப் பெருந்தகையார் பார்த்து மகிழ்வதற் கேதுவில்லாது போயிற்றே யென்று மிகவும் வருந்துகிறேன். முதற் பதிப்பின் முகவுரையையும் சேர்த்தே அச்சிட்டிருக்கிறேன்.

இப்பதிப்பில் சிலவிடங்களில் சொற்கள்
மாற்றப்பட்டுள்ளன:—

முன்னுரையில்: இவர்கள் அனைவர்கட்கும்—இவரனைவர்க்கும்

விநாயகர் காப்பில்: நமக்கருளும் — நயந்தருளும்.

நூல் செய்யுள்:—

| | | | |
|---|---|---|---|
| 15-ல் | கெடிலவதிகையம் | — | கரையிலன்றேறி |
| | பதியடைந்தோன் | | நின்றபெருமான் |
| 16-ல் | அணையில் | — | அணைவாழ் |
| 25-ல் | பெருமிறைவி | — | பேரிறைவி |

என இவ்வைந்து இடங்களில் மாற்றப்பட்டுள்ளன.

இங்ஙனம்,

**மகா. சோமசுந்தரம்,**

நூலாசிரியன்.

இந்நூல் முதற்பதிப்பாக வெளிவந்தபோது, சேலம்மாவட்டம் வேலூர், ஸ்ரீ பரிமளகண்டர் அவர்கள் உயர்நிலைப் பள்ளித் தமிழ்ப் பண்டிதர் உயர்திருவாளர் **S. K.** இராமராச ரெட்டியார் அவர்கள் மனங் களிகூர்ந்து எழுதி யனுப்பித்தந்த நிருபம்.

ஸ்ரீ :

**S. K. இராமராசன்,**
கண்டர் உயர்நிலைப் பள்ளி,
வேலூர் (சேலம்)

வேலூர்,
**12—12—57.**

ஸ்ரீமத் ஸ்வாமிகள் திவ்ய சமூகத்திற்குக் கனிந்த கைகூப்பு. நலம்; நலமறிய விரும்புகிறேன். தங்கட்குக் கடிதம் எழுதும் நற்பேற்றை நல்கிய திருவருட்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

ஸ்ரீ சுட்பைய ஸ்வாமிகள், தாங்கள் திருவாய்மலர்ந்த மீனுட்சியம்மையார் தோத்திரப் பாமாலையை எனக்கு அனுப்பி யிருந்தனர். சுவைத்துப் படித்தேன். சொற்பொரு ணயங் கண்டு பேரின்பமுற்றேன். தங்களை "அபிநவ குமரகுருபரர்" என்று கூறலாம். இது முகமன் அன்று. தக்க சொற்கள் உரிய இடத்தேயிருந்து மிக்க உவகையைத் தருகின்றன. சொற்களைத் தாங்கள் தேடிப்போக வில்லை; சொற்கள்தான் தங்களைத் தேடி வந்து பெருமை பெறுகின்றன.

"கோல வாரிசங் கோமள வீடதாக் கொண்ட பாரதி" என்ற பகுதியும், "ஏர்பூத்த பவளமலை யொருபாங்கின் மரகத விளங் கொடி படர்ந்த தென்ன" என்ற பகுதியும், "அள்ளலிற் பிறவாத நளினவிறை" என்ற பகுதியும, "தீந்தமிழ் வளர்த்த சிவையே" என்ற பகுதியும், "தேனூறு பரிமளச் செக்கரிள முளரிமேற் சிறையனங் துயில்தடம்" என்ற பகுதியும், "கூம்பலின் றிச்சுருதி முடிமலர்ந் தருண்மதுக் கொப்பளித் துலவியோடிக் குவலயமு மண்டபகி ரண்டமு நிரம்புநின் கோமளத் தாண்மரைகளை" என்ற பகுதியும் பேரின்ப நல்கும் தமிழ்க் கருவூலங்களாகும்.

கீதை, வாசிட்டம் என்ற ஞானப் பனுவல்கள்பால் தாங்கள் கொண்ட அன்பு தெற்றெனத் தெரிகிறது. "பொற்பொருள் இருக்கும் நிலமீதிருந்து அறியாது பொங்கியழும் மிடியர்" என்ற பகுதியில் வேதாந்த நுண்பொருள் நன்கு விளக்கப்பட்டுள்ளது. ஞானசம்பந்தர், கவிராசபண்டிதர், குமரகுருபரர், சுந்தரமூர்த்தி, அகப்பொருட் கோவை நூல் நவில் வாதவூரர், புகார்க் சோமசுன், இப்பெயர் அமைப்பு புதியது; சுவையாகவுள்ளது. தாயுமான வர், வடலூராளி முதலிய ஞான நாயகர்களை, உரிய இடத்தே நினைந்து பாடியிருப்பது நயமாக வுள்ளது.

மீனுட்சியம்மையின் பிள்ளைத் தமிழை "மொழிக்கு மொழி மதுரிதங் குலவு பிள்ளைத்தமிழ்" என்று பாராட்டியது அறிஞர்க்கு நல்விருந்தாகும். அஞ்ஞானத்தைப்பற்றிக் கூறிய பகுதியும், தமிழ் நூல்களின் பெயர்களைச் சிலேடையாக அமைத்த பகுதியும் நல்லின்பத்தை நல்குகின்றன. இன்னும் பலபகுதிகள் யான் சுவைத்து மகிழ்ந்தேன். விரிக்கிற் பெருகும்; சுருக்கின் எஞ்சும். என்செய்வது?

அவையடக்கச் செய்யுளில், சோழவந்தானூர் அரசஞ் சண்முகனுரைப் போற்றிப் பாராட்டிய பகுதி, மிக்க இன்பத்தைத் தந்தது. செய்யுள்தோறும் உள்ள மகுடம், நன்றாக ஓசைபெற்று மதுரிக்கிறது. சீரிய கூரிய தீஞ்சொலால் தாங்கள் யாத்த நூல், கயற்கண்ணிக்கும் அடியார்க்கும் நல்லவிருந்தே. நூறு பாடலாக இருப்பின் இன்னும் அதிக இன்பம் பெறலாம். வேறு நூல் யாத்திருந்தால் அனுப்புங்கள். அன்பை ஏற்றுக்கொள்ளுங்கள்.

வணக்கம்! இங்ஙனம்,

தங்கள் ஆசி விரும்பும்,

**S. K. இராமராசன்.**

சென்னை—அடையாறு, மகா மகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்துக் கௌரவ அமைச்சர் ஸ்ரீ ரா. விசுவநாதையர் அவர்கள், லைப்ரேரியன் ஸ்ரீலஸ்ரீ ஸ்ரீநிவாச ஐயர் அவர்கள், தமிழ் பண்டிதர் ஸ்ரீ டி. வடிவேல் முதலியார் அவர்கள் ஆகிய இம் மூன்று அறிஞர் பெருமக்களும் எனக்கு மனமுவந்தளித்த ஆசி வசன நிருபம் (டைப்ரைட்டிங் கார்டு)

உ

**மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்,**

**அடையாறு :: சென்னை—20.**

அத்யக்ஷர் : **ருக்மணி தேவி** **2—3—1959.**

அன்பு நிரம்பிய ஐயா,

நலம்; நலம். தாங்கள் அளித்த ஸ்ரீ மீனுட்சியம்மையார் தோத்திரப் பாமாலை என்னும் பக்தி நூலைப் படித்துப் பரவசமுற்றோம். தாயுமானவர், இராமலிங்க அடிகள் ஆகிய அடியவர்கள் சென்ற முறையில் தாங்கள் சென்றிருக்கும் முறை பாராட்டுதற்குரியதாகும். இங்குள்ள அன்பர்கட்கு வழங்கியதுபோக இரு பிரதிகள் நூல் நிலையத்தில் சேர்த்துள்ளோம் என்பதனை மகிழ்ச்சியுடன் அறிவித்துக்கொள்கிறோம். தங்கள் அன்பளிப்புக்காக எங்கள் நன்றி உரியதாகுக.

இங்ஙனம்,

**ரா. விசுவநாதன்,**

கௌரவ அமைச்சர்.

உயர்திரு மகா. சோமசுந்தர சுவாமிகள்,

C/o. No. 39, 3-வது மெயின் ரோட்,

காந்திநகர்—அடையாறு,

சென்னை—20.

## முதற் பதிப்பின் முன்னுரை.

---

இந்நூல். திருவாலவாய் என்னும் மதுரையம்பதியில் எழுந்தருளி விளங்கும் ஜகதம்பிகையாகிய ஸ்ரீ மீனுட்சியம்மையார் பேரிற பாடிய தோத்திரப் பாமாலையாகும். முப்பது செய்யுட்களால் யாக்கப்பெற்றது. முன்னோர் நூல்களாகிய சகலகலா வல்லி மாலே, சச்சிதானந்த மாலே, திருவேகம்ப மாலே, சோண சைல மாலேக ளாகிய இவைகள், முறையே பத்து, முப்பது, நாற்பது, நூறு செய்யுட்களால் யாக்கப் பெற்றிருக்கின்றன. இவ்விதம் பலவாருக இலக்கியங்கள் காணப்படுவதால், முப்பது செய்யுட்களேக் கொண்ட இந்நூலுக்கும் மாலே என்ற பெயர் சூட்டப்பெற்றது. மாலே யென்பதற்குப் பல பொருள்க ளிருப்பினும், இங்கு சொல்லாற்ளுெடுத்த தொடையே பொருளாகும்.

இதைப் பாடி முடித்த பின் ஆண்டுகள் சில கழிந்தன. அச்சிட்டுப் பார்ப்பது எப்பொழுதோ என்று நினேத்துக் கொண்டிருந்தேன். அப்படியிருக்கும் பொழுது **அச்சிட்டுத்தரும் பொறுப்பினே,**

உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களேவதாம் நட்பு —

என்னுந் தமிழ் மறைக்கிலக்கியமாய்ப் பன்னுட்பழகிய நண்பரும், உழுவலன்புடையாரும், சங்கமங்கலம் நடராஜ ஐயர் அவர்கள் ஜேஷ்ட புத்திரரும் ஆகிய (சீர்காழி தாடாளன் கோவில் சந்நிதித் தெரு) பிரம்மஸ்ரீ **S. N. வெங்கட்டராம ஐயர்** அவர்களும்,

ஷெ யார் மைத்துனரும், சாத்வீக குணத்துக்கொரு கொள் கலமாய் விளங்குபவரும், ராமநாத ஐயர் அவர்கள் குமாரரும் ஆகிய (ஷெ தாடாளன் சந்நிதித்தெரு) பிரம்மஸ்ரீ **R. சுப்பிரமணிய ஐயர்** அவர்களும்,

இவ்விருவர்களின் நண்பரும், முன்பின் அறியாதாரிடத்தும் முகமலர்ந்து பேசும் இன்சொல்லுடையாரும், கொல்லம் (அரிசி வியாபாரம்) **T. V.** கிருஷ்ண ஐயர் அவர்கள் குமாரரும் ஆகிய **பிரம்மஸ்ரீ T. K. வெங்கடேஸ்வர ஐயர்** அவர்களும்,

இம் மூவர்கட்கும் நண்பரும், சீர்காழி பிடாரி கோவில் தெற்குவீதி திருஞானசம்பந்தம் பிள்ளை அவர்கள் குமாரரும், "தந்தை அறிவு மகனறிவு" என்னும் முதுமொழிக் கேற்ப நல்லறிவு வாய்க்கப் பெற்றவரும் ஆகிய உயர்திருவாளர் **T. சாமிநாத பிள்ளை** அவர்களும், ஆக நால்வர்களும் ஏற்றுக் கொண்டார்கள். இந் நால்வரது நன்றிகளையும் என்றென்றும் மறவேன்.

இப் புத்தகத்தை அழகிய முறையில் அச்சிட்டுக் கொடுத்த, திருவாரூர்—விஜயபுரம் கருணாநிதி அச்சகத்தாருக்கு எனது நன்றி.

"இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி" எனப் புகழப் பெற்ற, தொன்றுதொட்டு வருந் தூய பழங்குடிகளிற் பிறந்த அறிஞர் பெருமக்களாகிய இவர் அனைவர்க்கும் அஷ்டைஸ்வரியமும், ஆரோக்கிய திடகாத்திரமும், சிந்தித மனோரத சித்தியும், சிவஞானச் செல்வமும் மேன்மேலும் விருத்தியடைய வேண்டுமென ஸ்ரீ மீனாட்சியம்மையாரின் திருவடிகளைப் பிரார்த்திக்கிறேன்.

இங்ஙனம்,

கோவிலூர் மடம்,
14—10—56.

**மகா. சோமசுந்தரம்.**



உ

திருவையாறு அறுபத்துமூவர் மடம்

**பண்டித சித. சங்கத்து நாராயணசாமி** அவர்கள் இயற்றிய

**சாத்துக்கவிகள்.**

**அறுசீரடி யாசிரியவிருத்தம்.**

முத்தமிழ் மதுரை தன்னின் முறைபுரிந் தரசு செய்யும்
வித்தகி மீனக் கண்ணி மிளிர்பதக் கணிசெய் பாவாற்
புத்தமிழ் தொழுகு மாலை புனைந்தனன் கோயி லூர்வாழ்
நத்துற வரனுஞ் சோம சுந்தர நாவ லோனே.

பத்தியின் சுவைகொண் டோங்கப் பழந்தமிழ் வரலாற்றோடு
தித்திக்கும் மொழியின் கூட்டந் திரண்டெளி தின்ப மூட்ட
ஒத்துநின் றொழுகு மிந்த வுவமமில் மாலை கேட்டால்
புத்தியை யெவரு மன்னை புகழினிற் புகுப்பர் நன்றே.



வேம்பத்தூர் வித்துவான்
சிலேடைப்புலி பிச்சுவையர் அவர்கள் குமாரரும்,
மதுரைக் கல்லூரி உயர்நிலைப்பள்ளி
ஓய்வுபெற்ற தமிழ்ப் பண்டிதருமாகிய

பிரம்மஸ்ரீ **பாஸ்கர ஐயர்** அவர்கள் இயற்றிய

சாத்துக்கவி.

நேரிசை வெண்பா.

சங்கப் புலவர்மெச்சத் தண்டமிழ்ப்பா மாலைசொற்றுன்
சங்கக் குழைக்காதார் சங்கரன்றன்—பங்கிலுறை
காவ லரசங் கயற்கண்ணி பூந்தாட்கு
நாவலவன் சோமசுந்த ரம்.

ஓம் சிவாய நம :

திருவாலவாய் என்னும்

**மதுரையம்பதியின்கண்**

எழுந்தருளி விளங்கும்

# ஸ்ரீ மீனுட்சியம்மையார் தோத்திரப் பாமாலை.



ஸ்ரீ விநாயகர் காப்பு

கட்டளைக்கலித்துறை

பூவார்ந்த சோலை மதுரைமீ னுட்சிதன் பொற்புகழ்சேர்
பாவார்ந்த மாலை யகவல் விருத்தம் பகருதற்கு
நாவார்ந்த சொல்லும் பொருளுநன் ருக நயந்தருளுஞ்
சேவார்ந்த சங்கரன் றந்தரு ளைங்கரச் சிந்துரமே.



ஸ்ரீ சரஸ்வதி காப்பு

கட்டளைக்கலிப்பா

பால வான்மதி சூடிய பண்ணவன்
பாகம் வந்த பராபரை பார்வதி
ஆல வாய்வள ரங்கயற் கண்ணியாம்
அம்பி கைதுதி யாரம தோதிடக்
கோல வாரிசங் கோமள வீடதாக்
கொண்ட பாரதி தண்டமி ழாகரி
யேல வார்குழ லின்னிசை நங்கையெற்
கினிய சொற்பொரு ளீந்தருள் செய்வளே.

## அவையடக்கம்



பன்னிருசீர் ஆசிரியவிருத்தம்

முத்தமிழ்ப் பாண்டிமது ராபுரிச் சங்கத்துண்
　　முனமிருந் தருளிறையனுர்
முதலாக வரசஞ்சண் முகனுர்த மீருக
　　முதுபெரும் புலவரெல்லாந்
தத்தமக் குளபுலமை மேதைகொடு நூல்செய்த
　　தமிழகத் தொன்றுமறியாத்
தமியேனு மதுசெய்வ தென்னிலோ வான்றவர்கை
　　தட்டிச் சிரிப்பராமால்
எத்துணைப் பிழைகள்கா ணப்படினு மவையாவு
　　மென்னதறி யாமையென்றும்
எங்கேனு மினியசொற் பொருள்காணி னவையெலா
　　மிறைவியரு ளென்றுமெண்ணிச்
சுத்தநற் பரிமளப் பூவினெடு நாரையுஞ்
　　சூடிமகிழ் வார்களேபோற்
சொற்பொருட் குற்றம் பொறுத்தெனது கவிகளுஞ்
　　சொல்லிமகிழ் வாரறிஞரே.



## நூல்

நீர்பூத்த கமலம்வளர் கலைவாணி வீணைவிரல்
நீவியின் னிசைமிழற்ற
நீடலை முழங்குதண் பாற்கட லுதித்தமக
ணிலவிடுங் கவரிவீசக்
கார்பூத்த மேனிவிண் வேந்துமனை யிந்த்ராணி
களிகொண் டடைப்பையேந்தக்
கவினிரதி படியகந் தாங்கிடப் பெண்குழுஉக்
கடவுளர்கள் வாழ்த்தெடுப்ப
ஏர்பூத்த பவளமலை யொருபாங்கின் மரகத
விளங்கொடி படர்ந்ததென்ன
விறைசோம சுந்தர ருடன்சிங்க மெல்லணை
யிருந்துலகை யாளுமரசி
சீர்பூத்த வைகைசூழ் பாண்டிவள மண்டலந்
திகழவரு தெய்வமின்னே
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 1

கோப்பெருந் தேவிகாஞ் சனமாலை கையினுற்
குளிர்கொண்டல் போனிறத்த
கூந்தலிற் றிருவினொடு பிறையணிந் திளமதிக்
குளமிசைப் பொட்டணிந்து
பூப்பெருங் குவளைவிழி யஞ்சன மணிந்துசெவி
பொற்புறக் கொப்பணிந்தம்

---

1. அடைப்பை = வெற்றிலைப்பை சின்மயம் = ஞானமயம்; இங்கே "மயம்" சொருபார்த்தம். பரிணாமார்த்தம், பிராசுர்யார்த்தம் அன்று.
2. கோப்பெருந்தேவி = பட்டத்துராணி குளம் = நெற்றி விது = சந்திரன் சே = இடபம்.

போருகக் கரமீது பொற்ஞெடி டணிந்திடைப்
பொலிவுறூஉம் பட்டணிந்து
நாப்பெரும் புகழுக் கடங்காத வடிகண்மிசை
நன்கல மெலாமணிந்து
நவமணித் தொட்டிலிட் டினிதுதா லாட்டமகிழ்
நகுவிதுக் குலவிளக்கே
சேப்பெருந் திருவூர்தி யெம்பிரான் பிரியாத
தெய்வீக வாரணங்கே
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ ஞட்சியுமையே. 2

அந்தரி சவுந்தரி சுதந்தரி பவானிபர
மானந்த வல்லிவாலை
யாயிசிவை குண்டலினி யோங்காரி யம்பிகை
யனந்தமய செககாரணி
சுந்தரி கபாலிதிரி புரைவாமி சிவகாமி
சுருதிசொலு மபிராமியே
சுகவடிவ முத்தியரு ளென்றுதொழு மன்பரைத்
தொண்டனேன் றுதிபுரிவனே
முந்தரி தனக்குமவ னுந்தியய னுக்குமடி
முடியறிய வரியபொருளாம்
முழுமுதலே யேதனது கொழுநனென் றிதயமகிழ்
மூன்றுகண் ணுடையபொன்னே
செந்திரவி யக்குன்ற மென்னநெற் போர்கள்புரி
தென்பாண்டி நாட்டரசியே
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ ஞட்சியுமையே. 3

---

3. முந்து = முற்காலத்தில் செந்திரவியக் குன்றம் = மேருகிரி.

சொற்பொருளமைந்தமுதுநால்வர்தமிழ்வாய்கொண்டு
தோத்திரம் பாடியறியேன்
தூயவுள ளுகிநின தாயிரம் பேர்சொலித்
தோட்டுமலர் தூவியறியேன்
முற்பொருள தாமுன்னை யுள்ளபடி யுணர்கின்ற
மோனயோ கம்புரிகிலேன்
மூள்பிறவி யேழ்கடலை யெந்தவித நீந்துவேன்
முத்திதரு நீயிருக்கப்
பொற்பொரு ளிருக்குநில மீதிருந் தறியாது
பொங்கியழு மிடியரைப்போற்
போக்கினேன் வாணுளை யினியேனு மன்னைநின்
பூவடிகள் சாரவருள்வாய்
சிற்பொரு ளெனச்சுருதி செப்பியொளிர் தீபமே
தென்னவர் குலக்கொழுந்தே
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 4

பிள்ளையின துள்ளம்வெகு பேதைமைய தாதலாற்
பிழைபுரித லுலகவியல்பே
பெற்றவள் பொருதுகரம் விட்டுவிட் டாலது
பிழைப்பதெவ் வாறதைப்போல்
உள்ளபடி சொல்லுவே னிதுவரையு முன்னையா
னுள்கவிலை யெனதுகுறைதான்
உயிர்களெல் லாம்பெற்ற கருணைவடி வன்னைநீ
யுவகைசெய் தாளவேண்டும்

---

4. மிடியர் = வறியோர் சுருதி = வேதம்.

5. உள்கவிலை = நினைக்கவில்லை வள்ளம் = கிண்ணம்.

வள்ளமிசை ஞானவமு தந்தந்து கவுணியர்கண்
மரபில்வரு சிறுகுழந்தை
வாய்நின்று மின்கவிதை பொழிவித்து வாழ்வருளும்
வண்ணமர கதவல்லியே
தெள்ளமுத மாகிவரு வைகைநதி நீர்பாய்ந்து
செந்நெல்விளை பாண்டியரசி
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே 5

பலகோடி பிறவியி லுழன்றுழன் றிந்தநாட்
பரிபாக லேசவசமாய்ப்
பரகதி பெறற்குரிய மனிதவடி வாகியும்
பாழ்மனது போகும்வழிபோய்
உலகோடு மருவிவரு துக்கபர ஞகியே
யுனையான் மறந்துவிடிலோ
வுண்மைபெற லெந்தவிதம் ஓம்நமசி வாயையென்
றுருகவைத் தருள்பொழிகுவாய்
தலகோடி யுண்டசெந் திருவாய் மலர்ந்துமுன்
றனுவிசயன் மயலொழித்தே
சமர்மூட்டி யொருதினந் தபனனை மறைத்திட்ட
சக்கரப் புயல்தங்கையே
சிலகோடி யன்றியே வெகுகோடி புகழ்பெருகு
செஞ்செழியர் நாட்டரசியே
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 6

---

6. பரிபாகம் = சஞ்சிதத்தினின்றும் மனிதப்பிறவிக்கு ஏதுவாய்ப் பக்குவப்பட்ட கர்மம். தலகோடி = அண்ட கோடி. தபனன் = சூரியன்.

கொம்புவிட் டொருகொம்பு பாயுங் குரங்குபோற்
குவலயத் தெங்குமுழலுங்
கோபலோ பாதியுரு வாய்வந்து சமமாதி
கூடாம லாறலைக்கும்
வம்புவிட் டவிழுமல ரணியளக மின்னார்
மயக்கூட்டி யறிவழிக்கும்
வாராத பொருள்வேண்டி மன்றாடு மிந்தமன
மாயையற மந்த்ரமிலையோ
அம்புவிட் டகலாத சிலைநுதற் கண்ணியே
யகம்விட்ட அறிஞரமுதே
யணைவிட்ட கடலுலகில் வாதிட்டு மதமெலா
மளவிடாப் பெரியபொருளே
செம்புவிட் டளவாத கனகமே வரையில்வேல்
செலவிட்ட சேயன்னையே
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னாட்சியுமையே. 7

சங்குஞ் சுடர்த்தரள மணியுமெறி யாழிசூழ்
தரணியின் றோற்றமுழுதுந்
தறிதோன்று புருடனுங் கானல்வரு நீரமுந்
தாம்பிடை விளங்குமரவும்
பொங்குங் கதிர்த்தவள விப்பியொளிர் வெண்பொனும்
போலவே பொய்யாமெனும்

---

7. ஆறலைக்கும் = வழிப்பறி செய்யும் வம்பு = வாசனை அளகம் = கூந்தல் அளவாத = கலவாத.

8. தரளம் = முத்து குந்தளம் = கூந்தல் மேனை = இமயாசலன் மனைவி. பொன்மாலை = காஞ்சனமாலை (மலயத்துவசன் மனைவி)

போதமின் றித்திரியு மெளியனேன் பூரணப்
பொருளுன்னை யுணர்வதென்றோ
கொங்குங் கொழுந்தளமு மதுவுமுறு மணமலர்க்
குந்தளத் தோகைமயிலே
கோமகளிர் மேனையும் பொன்மாலை யுங்கரங்
கொண்டுதா லாட்டுகுயிலே
செங்குங்கு மத்திலக வதனியே சிவபிரான்
றிருவுள்ள மருவன்னமே
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 8

பிங்கலை யிடாவெனு மிரண்டுவழி மாருதம்
பிழைபடா தொருமையுறவே
பேசரிய வோரிதழ்த் தாமரையை மேனிறீஇப்
பிரணவ நினைந்துவிரவி
மங்களம தானசிறு சுழிமுனை புகுத்தியே
மனதுவச மாகிவரவும்
வாராத காட்சிகளும் வந்தொளிர வுங்கருணை
மழைபொழிய வேண்டுமம்மே
அங்களப குங்குமக் கொங்கையயி ராணியுட
னுழிபெறு சீதேவியும்
அள்ளலிற் பிறவாத நளினவிறை நாமகளு
மடிபணிந் தேத்துமமுதே
திங்களணி மாடமிசை யாடுகொடி யடியார்கள்
தெரிசிக்க வரவழைக்குந்
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 9

9. நிறீஇ = நிறுத்தி (சொல்லிசை உயிரளபெடை) களபம் = கலவைச்சாந்து அள்ளல் = சேறு நளினம் = தாமரை.

பூவாரு நல்லபொற் ருமரை படிந்துமெய்
பொலியவெண் ணீறுபூசிப்
புங்கமிகு கண்மணிக் கண்டிகை புனைந்துனது
புனிதசந் நிதியடைந்து
நாவார வைந்தெழுத் தோதிவிழி நீர்மரும
நனையப் பொழிந்துநின்றுன்
ணுண்மலர்த் திருவடிக் காளாகு நாளெந்த
நாளந்த நாளருளுவாய்
மாவார ணங்கடைய வந்தவிட முண்டபரன்
மரியா திருக்கவென்றும்
மங்காத மங்கலத் திருநாண் கிடந்தொளிரும்
வளவிய கிரீவமங்காய்
தேவார முப்புகழ்த் திருவாச காதியுஞ்
செவியமுத மாய்நிரப்புந்
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னாட்சியுமையே. 10

தருவா யிருந்துபொன் னுலகாளு மிந்த்ராதி
தம்பதமு மித்தையெனவே
தள்ளியொரு நிலைபெறற் கியமநிய மாதிநூல்
சாற்றுத லறிந்துமென்ன
வொருவாய்மை யேனுமென் மனதிலிலைபொறுமையோ
வோரெள்ளி னளவுமில்லை
யுறுகோப மாறவிலை சிறிதேனு மாசையோ
வோயவிலை யாதுபுரிவேன்

---

10. கண்மணி = உருத்திராட்சமணி மருமம் = மார்பு
வாரணம் = கடல் (இங்கே பாற்கடல்) கிரீவம் = கழுத்து.

11. தருவாய் = (கற்பக) மரத்தின் (நிழலின்) கண் மித்தை = பொய் பவம் = பிறவி.

குருவா யெழுந்தருளி நின்கொழுநன் வந்தடிமை
கொள்வனே லுய்திபெறுவேன்
குரைகட லுடுத்துவளர் தரைவள ருயிர்க்கெலாங்
குளிர்கருணை யன்னைநீயே
திருவாய் மலர்ந்தருளி யெனதுபவ நீங்கவே
செயவேண்டு ஞானவரசி
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 11

இந்தனமு நவமணியும் வரிவளையும் விற்றுவர
வெழின்மாட வீதிபுகுநாள்
எந்தைதிரு வடிமலர்க ளென்சிர முறும்படியொ
ரெளியபுல் கல்லாகவோ
வந்ததனி லேகிடந் துயர்வாழ்வு பெற்றிலேன்
மலைமகா ணியேனுமோர்
வழியாக வுதவிசெய் தாயுமிலை யினியேனும்
வான்கருணை பொழிதியம்மே
சந்தன மரஞ்செறியு மலயமுனி யைக்கொண்டு
சங்கநக் கீரனுக்குத்
தண்டமி ழுணர்த்தியொளிர் பொற்கிழி யளித்துநற்
றருமியைக் காத்தபரனைச்
செந்தன மகாசலம் வளைத்தசிவ நம்பனைச்
செம்பாதி பெற்றவடிவே
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 12

---

12. இந்தனம் = விறகு அதனிலே = அந்த மாடவீதியிலே
மலைமகாள் = மலைமகளே (விளி) செந்தன மகாசலம் =
மேருகிரி நம்பனை = சிவபெருமானை செம்பாதி = சரிபாதி.

பவராசி யானவெழு சலராசி தாண்டியே
பரமான கரைசாரவுன்
பதவாரி சப்புணை கடுணையாக நம்பினேன்
பரமனையு முனையுமல்லால்
எவராவ திப்பெரிய வுவராழி சூழ்புவியி
லீடேற்ற வல்லருளரோ
விந்தவுட லழியுமுன மெந்தவித மாவேனு
மென்னையாண் டருள்புரிகுவாய்
தவராச னுனவொரு கவிராச பண்டிதன்
றன்சுதை யெனக்காசிபோய்த்
தனவணிக ராவணங் கண்டமணி சேர்பொனுற்
சமைகடக மணிகரத்தாய்
சிவராச தானியென மகிழ்வோடு மக்களுந்
தேவர்களும் வந்துபணியுந்
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 13

---

13. புணைகள் = மரக்கலங்கள் கவிராசபண்டிதன் = வேம்பத்தூரிலிருந்த இரண்டாயிரத்தெட்டு அந்தணர் குடும்பங்களுள் ஒரு குடும்பத்திற் பிறந்தவர்; பாண்டியநாட்டு வீரசோழம் என்னும் ஊரில் வசித்தவர்; ஸ்ரீமீனம்பிகையின் திருவருள் பெற்ற பெரியவர்; சௌந்தரியலகரியைத் தமிழிற் பாடியவர்; ஞானவாசிட்டத்தைத் தமிழிற் பாடிய வீரை மாதவப்பட்டர் ஆளவந்தார் முனிவருக்குத் தகப்பனுர். சுதை = மகள் ஆவணம் = கடைவீதி மணிசேர் பொனுற்சமை கடகம் = இரத்தினங்கள் பதித்துத் தங்கத்தால் அமைக்கப்பட்ட கைக்காப்பு.

கமரினிடை நழுவிவீழ் தயிலமென வும்புழுதி
களில்வீழு மிரதமெனவுங்
கடுகளவு பயனிலா தைந்துவழி யோடுமுட்
கரணமொரு நிலைபெருதே
தமரமக ராலயத் தெழுதிரைகள் போலவரு
சங்கற்ப சாலமெல்லாந்
தழலுண்ட பளிதமாய் நினதருள் விழுங்கிடச்
சமரசம் பெறுவதெந்நாள்
குமரகுரு பரமுனி மொழிக்குமொழி மதுரிதங்
குலவுபிள் ளைத்தமிழ்சொலிக்
குழுவரங் கேற்றமைய மருகிருந் தேற்றதிற்
கூறும்வா ரானையொன்பான்
றிமிரமறு கவிசொலத் திருமலை நராதிபன்
றிகழ்மணி கழற்றியிட்டோய்
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 14

நெஞ்சா லியன்றவண மிடர்செய நினைந்தமணர்
நீற்றறை விடப்பிழைத்து
நெடியகற் றூணிற் பிணித்தலை முழங்கியெறி
நீராழி யிடவெழுத்தோ

---

14. கமர் = நிலப் பிளப்பு தமரம் = முழக்கம் மகராலயம் = கடல் பளிதம் = கர்ப்பூரம் குழுவு = கூடுகின்ற ஒன்பான் = ஒன்பதாவது கவி = (தொடுக்குங் கடவுட் பழம்பாடல் என்னும்) செய்யுள், சிலர், முத்தப்பருவத் துள்ள "காலத்தொடு கற்பனை கடந்த" என்னும் செய்யு ளென்று சொல்லுவர்; ஆராயத்தக்கது.

15. எழுத்து ஓர் அஞ்சால் இயன்ற பதிகம் = பஞ்சாட்சரப் பதிகம் மஞ்சு = மேகம்.

ரஞ்சா லியன்றபதி கஞ்சாற்றி யேகரையி
லன்றேறி நின்றபெருமான்
அன்பான் "முளைத்தானை" யென்றெடுத் துத்தமி
ழருங்கவிகள் பாடமுன்னுண்
மஞ்சா லியன்றமழை பொழிவதென வருள்பொழியும்
வள்ளற்கு வாய்த்தமின்னே
மன்னன்மல யத்துவச வழுதிமக ளாய்வந்து
மகுடமுடி யேற்றபொன்னே
செஞ்சாலி யுங்கழையும் வாழையொடு பூகமுந்
தெங்குமெவை யுஞ்செழிக்குந்
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னாட்சியுமையே. 15

முந்துரவி குலராமன் மோனமுற முனியொருவன்
மொழியுநூன் முதலவெல்லாம்
முதுநாம ரூபப்ர பஞ்சங்கண் முழுதுக்கு
முற்றமித் யாரோபமே
தந்துரம தாய்நின்று சாதிக்க வென்மனஞ்
சத்திய மெனக்கருதியே
சஞ்சலப் படுதலான் மாற்றியமு தம்பெறத்
தண்ணருளை வேண்டுகின்றேன்
இந்துரவி மண்டல மிழிந்தெனச் சுடர்வீசு
மிந்திர விமானவணை வாழ்
எங்களிறை வன்சோம சுந்தர னுடன்றங்கி
யிலகுகோ மளவல்லியே

---

16. ரவிகுலம் = சூரியகுலம் முனியொருவன் = வசிட்ட முனிவர் நூல் = (ஞானவாசிட்ட) நூல் தந்து = நிர்ணயித்து இந்துளாடவி = கடம்பவனம்.

சிந்தூர விளம்பிடிய தாயிந்து ளாடவி
செறிந்துவள ராரணங்கே
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 16

இம்மணி லுதித்துநர வடிவாகி வந்தவரி
லென்போல வொருவருளரோ
விரவிமதி வாயுவைச் சுழிமுனை புகுத்துமுறை
யெளிதுகுரு நாதனருளாற்
கைம்மணி நிகர்ப்பவுப தேசித்து மதனையான்
கைக்கொண்டு தேறிடாமற்
காலங் கடத்தினே னம்மா பிராரத்த
கருமத்தை யென்சொல்லுவேன்
மும்மணி யெனக்குலவு பெண்மணிக ளேதனது
முக்கண்மணி யானமணியே
முழுமணிச் சுட்டியொளிர் நுதலிடை யிளந்திங்கண்
முன்பக்க மாணிக்கமாஞ்
செம்மணி யிழைத்தெனச் சிந்தூர திலதமணி
செந்தமிழ்ப் பாண்டிமணியே
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 17

---

17. இம்மணில் = இப்பூமியில் (ணகர ஒற்று தொக்கியது) திலதம் அணி = பொட்டு அணிகின்ற. இளந்திங்கள் முன் பக்கம், மாணிக்கமாஞ் செம்மணி யிழைத்தென, நுதலிடை சிந்தூர திலதம் அணி பாண்டிமணியே யெனக் கூட்டுக.

குன்றுகளொ ரெட்டுமெழு தீவுகளும் வேலைசூழ்
குவலயமொ ரேழிரண்டுங்
கொடுமுடிக ளாயிரத் தெட்டுடைய மேருவுங்
குரவைக ளமிழ்த்தவருநாள்
அன்றுமழி யாதபடி யென்றென்றும் வாழ்வடையு
மன்னைநீ யாயிருக்க
ஆயிலாச் செய்போல நோதலழ கல்லவெனை
யாண்டருள் வழங்கிடம்மா
மன்றுணட மிட்டெட்டி லொன்றுகுறை வாரிகளும்
வைகையு மழைத்துமகனு
வந்தவழு திக்குநகு வளைசெண்டு வேலுதவு
மாதகை மணந்தகொடியே
சென்றுகளி வண்டினந் தேனுண்ட பரிமளச்
செங்கமல வாவிபுடைசூழ்
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 18

கொஞ்சுமா ரமுதமொழி நஞ்சுநேர் கரியவிழி
கொந்துசேர் தகரவளகங்
கொண்டவான் மதிவதனி வண்டுலாங் கடிகொள்பூங்
கொம்பனுள் பரவைமனைவாய்
அஞ்சுமா நடுநிசியி லன்பொடா ரூர்மறுகின்
அன்றுபோய் நின்றபெருமான்
அஞ்சரோ ருகசரணம் வஞ்சனேன் முடிபுனைய
அம்பிகா அருள்பொழிவையோ

---

18. வேலை = கடல் கொடுமுடிகள் = சிகரங்கள் குரவைகள் = கடல்கள் வழுதி = (உக்கிர குமார) பாண்டியன்.

19. அஞ்சும் = பயப்படத்தக்க சிஞ்சுமாரம் = முதலை செஞ்சவே = செவ்வையாகவே.

மஞ்சுமா கம்பரவி வந்துதவ முஞ்சக்ர
வாளமென வானளாவி
வண்பதா கைக்குழா நின்ருடு சிகரமுறு
மதில்சூழு மகழியின்கட்
சிஞ்சுமா ரங்கிடந் தமரவரு பகைஞரைச்
செஞ்செவே வெருவுறுத்துந்
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ ஞட்சியுமையே. 19

மாருது நினதருட் கடலிடை யழுந்தியுன்
மத்தனென வேயிருந்த
மறையவ னமாவாசை யன்றுபூ ரணையென்ற
வாக்கைமெய் யாக்குவிக்க
வீருக விண்ணினிடை யம்புலி யெனக்கங்குல்
விடியும்வரை நிலவுவிரிய
மிளிர்தோடு வீசியிடு மபிராமி யுன்கருணை
விளையாட லென்னேயென்னே
நீருக முப்புர மெரித்ததழ னகையானை
நீள்கங்கை யுச்சியானை
நீபவண் காட்டானை வெள்ளானை யின்சாப
நீக்கிவழி காட்டிஞனைத்
தேருத மறைகளுக் கெட்டானை ரவிமுதற்
றிகழெட்டி ஞனைவேட்ட
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ ஞட்சியுமையே. 20

---

**20.** மறையவன் = அந்தணன் ; (அபிராமியம்பிகையின் திருவருள்பெற்ற திருக்கடவூர் அபிராமபட்டர்) பூரணை = பௌர்ணமி வேட்ட = மணந்த.

உற்கையி னொளிக்குமுகி லூடொளிரு மின்னற்கு-
மோங்குமெழு நாவழற்கு
மொண்குமுத மலரவரு தண்கலை மதிக்குமின
னோராயி ரங்கதிர்க்கும்
நெற்கிடையு மெட்டுணையு நீங்காத வஞ்ஞான
நீடிமிர மோடியொழிய
நின்கருணை யானந்த மெய்ஞ்ஞான பானுவென்
னெஞ்சக முதிக்கவேண்டுங்
கொற்கையி னிருந்தரசு புரிசெழியர் தங்குலங்
கொண்டாட வந்தகொடியே
குலசேக ரக்குரிசில் பெற்றமல யத்துவச
கோமகன் கொஞ்சுமகவே
தெற்கினுள குமரிவட வேங்கட மிரண்டிடைத்
தீந்தமிழ் வளர்த்தசிவையே
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொரூபபர
தேவிமீ னாட்சியுமையே. 21

மொய்த்தகதி ரோன்வீசு வெய்யின்மழை வாடைபனி
முற்றுஞ் சகித்தவணமாய்
மூடுமொரு போர்வைகுடை பாதுகை முதற்கொளா
முழுவிரா கம்படைத்த
மெய்த்தவர்கள் வாழ்ந்துவரு மித்தரையி லெனையுநிரு
மித்துவிட் டாயம்மையே
மேதக்க சாதன நிரம்பியுன் பூஞ்சரண
வீடுபெற் றுய்குவேனோ

21. உற்கை = நட்சத்திரம் இனன் = சூரியன் நெற்கிடை = நெல்லளவு எட்டுணை = எள்ளளவு.

22. நாவலோ எனும் முழக்கம் = போர் குவித்தல் முதலிய செயல்களில் மருதநிலத்து மக்கள் "நாவலோ, நாவலோ"

நெய்த்தசுரி பூங்குழற் கடைசியரு முழவரு
நெடுங்கள நிறைத்தபோரில்
நிகர்நாவ லோவெனு முழக்கமெண் டிசைபரவு
நீண்மருத வளமோங்குநன்
செய்த்தடம் விளைந்தநெற் கதிர்வளை ந் தடியின்மலர்
சேயிதழ்க் கமலமருவுந்
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 22

சீலங் கடந்தகுழ விப்பருவ நீங்கியது
சிறுகுமா ரம்போயது
திகழெவ்வ ணத்தகைமை யுங்கடந் தேகியது
செறிமுதுமை வந்ததிப்பாற்
காலங் கடத்தினே னிதுவரையும் வீணிலே
காலனுக் கேதுமொழிவேன்
கவலா திருந்துநின் றிருவடிப் பேறுறூஉங்
கருணையமு தம்பொழிகுவாய்
நீலங் கடிக்கமல மாவசோ கந்தளவு
நிகழைந்து பகழியுடனே
நெடியசெந் தீங்கழைக் கோதண்ட முங்கொண்ட
நிமலையே யிமயமயிலே
சேலங்கண் மூன்றுடைத் திருமுக விலாசியே
செழுநீப வனவாசியே
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 23

---

என்னும் முழக்கத்தைச் செய்வர்; இப்பிரயோகத்தை முத்தொள்ளாயிரம், ஏரெழுபது, சேக்கிழார் பிள்ளைத்தமிழ் முதலிய நூல்களிற் காண்க.

23. கவலாது = கவலைப்படாது பகழி = அம்பு.

வானூறு மகபதியை முன்னிட்ட விண்ணவர்தம்
வண்பத மெலாமிகழ்ந்து
மறைமுடிக ளோலமிடு முனதுபத வாழ்க்கையே
வாஞ்சைசெய் தெதிரில்நின்றே
யானூறு தரமோதி னுலுநின் செவிசாய்த்து
யாதுகரு தியதென்கிலாய்
யாக்கையழி யாமுன்ன நீக்கரிய விப்பிறவி
யாதனையை நீக்கியருள்வாய்
நானூறு காரிகை யகப்பொருட் கோவைநூல்
நல்வாத வூரன்மொழிய
நன்கனம் வரைந்திறுதி கையெழுத் திட்டவிறை
நாடக மகிழ்ந்தநங்காய்
தேனூறு பரிமளச் செக்கரிதழ் முளரிமேற்
சிறையனந் துயில்தடஞ்சூழ்
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொரூபபர
தேவிமீ னுட்சியுமையே. 24

ஏட்டுக் கடங்காத கவலையெல் லாமுனக்
கெத்தனை யெடுத்துரைப்பேன்
எங்குநிறை வடிவினெடு முற்றறிவு முடையபே
ரிறைவிநீ யென்னிடத்தே
கேட்டுத் தெரிந்தாக வேண்டுமென் றில்லையே
கேளாது தெரிவையன்றோ
கிட்டரிய விம்மனித வுடல்பிரிந் திடுமுனங்
கேடிலா வீடருளுவாய்

---

24. காரிகை = கட்டளைக்கலித்துறை கோவை நூல் = திருக்கோவையார்.

25. முற்றறிவு = சர்வச்ஞத்துவம் மதிமலியெனும் பா = "மதிமலி புரிசை மாடக் கூடல்" என்னுந் திருவாலவா

பாட்டுக் கிசைந்தபடி யாழிசைக் கும்பாண
பத்திரன் றன்பொருட்டுப்
பனைமடற் சேரலன் பார்க்க"மதி மலி"யெனும்
பாவெழுது வோன் றுணைவியே
சேட்டுக் குலைத்தெங்கின் முப்புடைப் பழம்வீழ்ந்து
தீம்பலாக் கனியுடைக்குந்
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 25

கூம்பலின் றிச்சுருதி முடிமலர்ந் தருண்மதுக்
கொப்பளித் துலவியோடிக்
குவலயமு மண்டபகி ரண்டமு நிரம்புநின்
கோமளத் தாண்மரைகளைச்
சோம்பலின் றித்தினமு முள்கியுள் கிப்பரம
சுகவாழ்வு பெற்றுமகிழ்வாத்
துன்பவெங் கல்லோலம் வீசுபிற விக்கடற்
சுழலா திருப்பதென்றோ
ஆம்பலின் குழலூதி யானிரை யழைத்தாய
ரகவுறியின் வெண்ணெய்திருடி
யண்டரிய காளிந்தி மடுவினிற் காளிங்க
னவிருமணி முடியிலாடித்
தேம்பலின் றிப்பெரிய பாரத நடத்திடுஞ்
சீமுத மேனிதங்காய்
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 26

---

யுடையார் திருமுகப்பாசுரம்; இப்பாடலைப் பதினோராந் திருமுறையின் முதலிற் காண்க.

26. கல்லோலம் = அலை ஆம்பல் = மூங்கில்.

கூறுதுறை வழுவாது துறவுகூ றும்புகார்க்
    கோமகனை முன்னிட்டபேர்
குவலயத் தவதரித் தின்பநிலை கூடவுங்
    கொஞ்சமும் விராகமின்றி
யேறுதுறை தெரியாது வாணாள் கழித்துவரு
    மெனையும் படைத்துவிட்டா
யித்தகைய கருமபரி பாகத்தை மொழிவதென்
    னினியாவ தருள்செயம்மா
நூறுதுறை கொண்டொளி ரகப்பொருட் கல்லாட
    நூறகவல் யாப்பினுக்கும்
நூறுதர முந்துளக் குஞ்சிரத் தேபத்து
    நூறுமுக நதியுளானைத்
தேறுதுறை "அன்பினை ந் திணை"யென் றெடுத்தகச்
    செய்யுள்செய் தானைமருவுந்
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
    தேவிமீ னாட்சியுமையே. 27

---

27. புகார்க் கோமகன் = பட்டினத்து சுவாமிகள்; நூறு துறை கொண்டொளிர் அகப்பொருட் கல்லாடம் = திருக்கோவையாருட் கண்ட நானூறு துறைகளில், எடுத்துத் தொகுத்த, நூறு துறைகளைக்கொண்டு விளங்கும் அகப்பொருள் இலக்கியமாகிய கல்லாடம். தேறுதுறை = கற்றுத் தெளியத்தக்க துறைகள். அன்பினைந்திணை = இஃது இறையனார் அகப்பொருள் முதற் சூத்திரத் தலைப்பு. எடுத்து = ஆரம்பித்து; (அன்பினைந்திணை என்று எடுத்து தேறு துறை அகச்செய்யுள் செய்தானை மருவும் உமையே என்று கூட்டுக.

இழியருவி யென்னவும் பொழியுமழை போலவும்
  மிருவிழியு நீர்சிந்தியே
யினியதிரு வருளுக் குரித்தான தாயுமா
  னேசர்வட லூராளிபோல்
வழியவழி யச்சொரிந் திருகண்க ணின்றுதக
  மார்புநனை வாகியோட
வந்ததிலை யொருகணமு மெனதுமனம் வன்கலோ
  வயிரமர மோவிரும்போ
பழியினை யொழித்திந்தி ரற்கருளன் முதலவறு
  பத்துநா லாடல்புரியும்
பரமபதி யென்றகற் பகதருவி னைச்சார்ந்த
  பசியகா மருவல்லியே
செழியன்மக ளாய்வந்து கலைபயின் றுலகுமுறை
  செய்தடா தகையரசியே
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
  தேவிமீ னாட்சியுமையே. 28

எந்தா யுனக்கியா னியம்புமித் துதிகவிக
  ளினியபத் துப்பாட்டல
எட்டுத் தொகைச்செய்யு ளல்லபதி னெண்கணக்
  கெண்ணிக்கை கொண்டதல்ல
பந்தாட விக்குணின் றுழலாது திருவருட்
  பற்றினுன் முத்தியெய்தும்

28. உதகம் = தண்ணீர் (ஆனந்தபாஷ்பம்) பழி = (விருத்திரா சுரனைக் கொன்ற) பாபம்.

29. எந்தாய் = எம் தாய் = எமதுதாயே (விளி). எந்தை யென்னும் சொற்றிரிந்த விளியன்று. பந்தாடவி = பந்தமாகிய காடு திசைவென்றி = திக்கு விஜயம்; இச்செய்யுளிற் பத்துப்பாட்டு முதலியவை தொனிப் பொருளாய் வந்திருத்தல் காண்க.

படியெண்ணி யெண்ணியறி யாமையாற் பாடுமுப்
பதுபாட லாகுமம்மே
மந்தானி லம்பரவு பாண்டியரண் மனையுள்வாழ்
மணிமேக லாபரணியே
மாமணிப் பரன்முழங் குஞ்சிலப் பதிகார
வாநொலிப் பூஞ்சரணியே
சிந்தா மணிப்பொருளு மைந்தருவு முதலியன
திசைவென்றி செய்துகொணருந்
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 29

மருவாழ்வு கொண்டமலர் போன்றநின் பொன்னடிகள்
வாழ்த்திவரு மன்பரெல்லாம்
மங்காத செல்வமுந் தானியமு மானமுது
மகவாதி யுந்திகழவே
பெருவாழ்வு கொண்டுடல நோயின்றி யின்பராய்ப்
பெட்புறுங் கல்வியறிவும்
பேரழகு நெடிதான வாயுளும் புகழ்களும்
பெரியர்நண் பும்பெருகிடத்
தருவாழ்வு கொண்டவன் வியந்திடக் குருலிங்க
சங்கமத் தன்புடையராய்த்
தவயோக ராசராய்ச் சிவஞான சீலராய்ச்
சனனமறு முத்தியென்னுந்
திருவாழ்வு கொண்டிலக வருள்பொழிதி யருள்பொழிதி
தெய்வநீ வாழி! வாழி!!
தென்மதுரை வாழ்பெரிய சின்மய சொருபபர
தேவிமீ னுட்சியுமையே. 30

ஸ்ரீ மீனுட்சியம்மையார் தோத்திரப் பாமாலை
முற்றிற்று.

# பிழை திருத்தம்.

## சொக்கலிங்க...சதகம்

| பக்கம் | பாட்டு | வரியும் குறிப்பும் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| II | முன்னுரை | 18 | அம்பிமைமீது | —அம்பிகைமீது |
| III | ,, | 9 | வேணடுவன | —வேண்டுவன |
| V | ,, | 8 | வேணடுமே | —வேண்டுமே |
| XXIII | ,, | 9 | புரக் ங் | —புரக்குங் |
| 7 | | கு | வி லை | —விபுலை |
| 12 | 15 | 12 | மனந்தரும் | —மணந்தரும் |
| 28 | 38 | 5 | யாடித | —யாடித் |
| 29 | 39 | 11 | மிபம்பரிய | —மியம்பரிய |
| 30 | 41 | கு | நுகாவினை | —நுகர்வினை |
| 33 | 45 | 11 | வான்புலர் | —வான்புலவர் |
| 35 | 48 | 11 | முளத்த | —முளைத்த |
| 39 | 54 | கு | சனகாதி | —கனகாதி |
| 42 | 58 | 11 | நோக்கமா | —நோக்காம |
| 45 | 62 | கு | அமபரம் | —அம்பரம் |
| 47 | 65 | 6 | வ ழ் | —வாழ் |
| 55 | 77 | 1 | கங்கைபா | —கங்கையா |
| 56 | 78 | 11 | நிதநிதமூ | —நிதநிதமு |
| ,, | ,, | கு | சங்கை | —கங்கை |
| 57 | 79 | கு | துன்பம | —துன்பம் |
| 58 | 81 | கு | விதி படி | —விதிப்படி |
| 62 | 86 | கு | வலிமை. | —வலிமை, |
| 71 | 98 | கு | யின்றிப | —யின்றிய |
| ,, | ,, | கு | க ணப்படும் | —காணப்படும் |
| ,, | ,, | கு | த யுமான | —தாயுமான |

---

